

# "நான் ஒரு கம்யூனிஸ்ட்"

-டி. ராஜேந்தர்

KALKI
11.8.85
ரூ. 1.50.

# கல்கி




**இந்திய திரைப்படப் பிரிவு காமராஜரைப் பற்றி ஒரு டாகுமெண்டரி வெளியிட்டுள்ளது. இதை எழுதி இயக்கியிருப்பவர் எஸ். கிருஷ்ணசாமி. அவர் தம் அனுபவத்தைச் சொல்லுகிறார்:**

மூணரை வருஷங்களுக்கு முன்னால் இந்தப் படம் சம்பந்தமான வேலைகளை ஆரம்பித்தேன். பத்திரிகைகளில் காமராஜர் படம் எடுக்கவிருப்பது பற்றித் தெரிவித்து, அவர் சம்பந்தப்பட்ட போட்டோக்கள், விஷயங்கள் வைத்திருப்பவர்களை உதவும்படி கேட்டுக் கொண்டேன். மத்திய அரசு, இந்தப் படம் எடுப்பதில்லை. சுப்பிரமணியத்தை ஆலோசகராய் இருக்கச் சொல்ல, அவரும் சந்தோஷமாய் ஒப்புக் கொண்டார். ஆர். வி. இது பற்றி அறிந்து, ஸ்கிரிப்டைப் பார்க்க வேண்டுமென்றும் இது சம்பந்தமாய்ப் பேச வேண்டும் என்றும் சொன்னார்.

தமிழ்நாடு அரசாங்கமும், ஹிந்துவும் நிறைய போட்டோக்கள் கொடுத்து உதவின. டெல்லியில் நடராஜன் என்கிற போட்டோகிராபர் காமராஜின் அபிமானி. அவர் நூற்றுக் கணக்கில் காமராஜ் போட்டோக்கள் வைத்திருக்கிறார்.

காமராஜர் பிறந்த விருதுநகர் வீட்டில் படப்பிடிப்பு நடத்தினோம். காமராஜ் மறைந்ததும் அவருக்கு அளிக்கப்பட்ட 'பாரத ரத்னா' விருது அவரது சகோதரியிடம்தான் இருக்கிறது. அதை வாங்கி காமராஜ் சிலைக்கு அணிவித்துப் படமெடுத்தோம்.

விருதுநகரில் என்னை ஆச்சரியப்படுத்தின ஒரு விஷயம், காமராஜின் இல்லத்தைச் சுற்றிலும் உள்ள சுத்தமான தெருக்கள். படம் பார்த்துவிட்டு, "ஷூட்டிங்கிற்காக, தெருச் சந்துகளை சிரத்தையுடன் சுத்தம் செய்திருக்கிறார்கள்" என்று எழுதியது ஒரு பத்திரிகை. ஆனால் அவை நிஜமாகவே சுத்தமாய்த்தான் இருக்கின்றன.

படத்தில் காமராஜ் 14 வயதில், கட்ட விழ்ந்து தெருவில் ஓடிய கோவில் யானையை அமைதிப்படுத்தினதாய் ஒரு காட்சி. காமராஜின் பால்ய நண்பர்கள் இந்த நிகழ்ச்சியை உறுதிப்படுத்தி, விவரம் சொன்னார்கள். காமராஜ் பத்து வயது முதலே கோவிலுக்கு தினமும் போவாராம். கோவில் யானையுடன் நட்புடன் இருப்பாராம். தேங்காய், பழம் எல்லாம் கொடுப்பது வழக்கமாம். குறிப்பிட்ட நாளில் பாகன் இல்லாததால், பாகனைத் தேடி யானையே கிளம்பிவிட, மக்கள் பீதியடைந்து சிதறி ஓட, விவரமறிந்த காமராஜ் விரைந்து யானையை அமைதிப்படுத்தி, திரும்பக் கோவிலுக்குக் கொண்டு போய்க் கட்டினாராம். இந்தக் காட்சியைப் பழக்கப்படுத்தப்பட்ட சர்க்கஸ் யானையை வைத்துப் படமாக்கினோம். சுமார் 2500 அடி இதை எடுத்து கடைசியில் 150 அடியாய் எடிட் செய்தோம். மிகவும் தத்ரூபமாய் அமைந்தது.

பேட்டி: எஸ். சந்திரமௌலி.

# இன்னுமா இந்தக்

## ஒரு கிராமத்தில் நடந்த வெறித்தனம்



• ரங்கநாதன்.



• பவுன்.

• ரேணு.

**குழந்தைகளை இழுத்துக் கொண்டு உயிரைக் காப்பாற்றிக் கொள்ள இருட்டில் வயல் காட்டில் ஓடினோம்.**

ஆரணி அரசினர் ஆஸ்பத்திரியில் பிச்சாண்டியை நான் சந்தித்தபோது, அவரால் பேசக் கூட முடியவில்லை. கையால் வாயைப் பொத்திக் கொண்டு 'ஓ'வென்று அழுதார். தலையில் கட்டு, கைகளில் கட்டு, காலில் வீக்கம்! பிச்சாண்டியைச் சமாதானப்படுத்திப் பேசச் செய்யக் கொஞ்ச நேரம் ஆனது. அதற்குள் அண்ணாமலை, ரங்கநாதன், ரேணு, கிருஷ்ணன், மாணிக்கம் ஆகியோர் பிச்சாண்டியின் பக்கத்தில் வந்தார்கள். எல்லோர் தலையிலும் கட்டு. மொத்தம் 21 பேர்கள் பலத்த காயத்துடன் ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டிருக்கிறார்கள்!

"நாங்க எங்காவது ஓடிப் போயிடறோங்க. எங்களுக்கு அந்தக் கிராமமே வேண்டாம்!"

"ஆண்டாண்டுகாலமாகவாழ்ந்துகொண்டிருக்கிறீர்கள். திடீரென்று ஊரை விட்டுக் கிளம்ப முடியுமா?"

"பின்ன என்ன செய்யறது ஸார்? எங்க உயிருக்கே ஆபத்துன்னு வரும்போது, பணமோ, நாங்க கட்டி வைத்துள்ள வீடுகளோ எங்களுக்கு எந்த விதத்தில் உபயோகமாக இருக்கும்? இப்போது போலீஸ் பாதுகாப்புப்போட்டிருக்கிறார்கள்.எத்தனைமாதம் தான் இந்தப் போலீஸ் எங்களைப் பாதுகாத்துக் கொண்டிருக்கும்?"

பிச்சாண்டியின் இந்தக் கேள்வி என்னைச் சற்று நேரம் சிந்திக்க வைத்தது. நெடுங்காலமாக அடக்கி, அடிமைப்படுத்தி வைக்கப்பட்டிருக்கும் இந்தப் பரிதாபத்துக்குரிய ஹரிஜன மக்கள், இன்னும் எவ்வளவு காலத்துக்குத்தான் இது போல இருக்க வேண்டும்?

அவர்கள்கிராமத்தின்பெயர் அக்ராபாளையம். இது அக்ரமக்காரர்களின் பாளையமாக மாறிவிட்டது என்பதற்கு ஜுலை 26ம் தேதி இரவு நடந்த சம்பவங்களே சாட்சியம் கூறும்.

இரவு எட்டரை இருக்கும். ஹரிஜன மக்கள் இருக்கும் காலனியில் சிலர் சாப்பிட்டுக் கொண்டிருந்தனர்; சிலர் தூங்கிக் கொண்டிருந்தனர். திடீரென்று ஒரே கூச்சல், சப்தம்.

"டேய், யார்டா அது .......பய்களா, வெளியே வாங்கடா!"

பயத்துடன் வெளியே வந்த ஒவ்வொருவருக்கும் தலையில் கம்பினால் அடி! கைகளில் கத்திக் குத்து!

தாக்கியவர்கள் அதேகிராமத்தைச்சேர்ந்த மேல் ஜாதி ஹிந்துக்கள்தான்!

175 பேர் கொண்ட காலனியினர், 1000 பேர் கொண்ட அந்த மேல் ஜாதியினரை எதிர்த்து என்ன செய்ய முடியும்?

தப்பித்தோம், பிழைத்தோம் என்று வயல் வெளிகளில் ஒளிந்து கொண்ட பலர் இன்று வரை கிராமத்துக்குத் திரும்பவில்லை!

அக்ராபாளையம் ஆரணியிலிருந்து ஆறு மைல் தூரத்திலுள்ள கிராமம். வன்னியர் குலத்தைச் சேர்ந்தவர்கள் 85 சதவிதம்.

மற்றும் முதலியார், நாய்க்கர் சமூகத்தைச் சேர்ந்தவர்கள். 30 குடும்பங்களே ஹரிஜனக் குடும்பங்கள். அரசு கொடுக்கும் சலுகைகளைப் பெற்றுக் கொண்டு ஹரிஜனக் காலனியில் கட்டிடங்கள் தோன்றலாயின. அரசாங்கம் அவர்களுக்கு 1972ல் (கலைஞர் காலத்தில்) வீட்டு மனைப்பட்டா வழங்கியது — ஊருக்கு வரும் வழியிலேயே. ஊரோடு இணைந்து, ஒன்றுபட்டு ஹரிஜனங்கள் வாழ வேண்டும் என்ற நோக்கத்தில்தான் இந்த இடத்தில் நிலம் வழங்கப்பட்டது. ஆனால் அந்த இடத்தில் ஹரிஜனங்களால் வந்து குடியேறவே முடியவில்லை! காரணம், அரசின் சர்வேயர் ஒவ்வொரு முறையும், கற்களை நாட்டி மனைகளைப் பிரித்துக் கொடுத்தால் அடுத்த நாளே கற்கள் பிடுங்கப்பட்டிருக்கும். இது போல ஒரு முறை, இரு முறை அல்ல, ஐந்து முறை! யார் பிடுங்கினார்கள் என்பது தெரிந்த விஷயம்.

''ஹரிஜனங்களுக்கு ஊருக்கு முன்பாக எப்படி நிலம் ஒதுக்கலாம்? அதுவும் திரௌபதி அம்மன் கோயிலுக்கு எதிர்ப்புறம்?'' இது ஜாதி இந்துக்களின் கொக்கரிப்பு.

நெடுநாட்களாக ஹரிஜன் காலனியில் யாராவது இறந்தால், குறுக்காக, வயல்களைக் கடந்து கொண்டு சேற்றிலும், சகதியிலும், பிணத்தைச் சுமந்து நடந்து செல்ல வேண்டியிருந்தது. ஹரிஜன மக்கள் இதுபற்றி முறை



• குளத்தை ஆக்கிரமிக்க ஜாதி ஹிந்துக்கள் போட்டிருக்கும் குடிசைகள்.



# கொடுமைகள்?

• சோகத்தை விவரிக்கிறார்கள்.

• ஹரிஜனக் காலனி.



• ஹரிஜனங்கள் பிணத்தை எடுத்துச் செல்ல அரசு போட்ட சாலை.

விடவே அரசு, அவர்களுக்குக் கொடுத்த நிலத்தை ஒட்டினாற் போலவே ஒரு சாலையை அமைத்துத் தந்தது. ஆனால் ஜூன் மாதம் 2-ம் தேதியன்று காலனியில் ஒரு பெண் இறந்து போனதும், சவம், அந்தச் சாலை வழியே செல்லத் தடை செய்தார்கள் மேல் ஜாதியினர். "நீங்க வயக்காட்டு வழியாகத் தான் போக வேண்டும்" என்று பிணத்தைத் தடுத்துநிறுத்தினார்கள். பிணத்தைநடுரோட்டிலேயேவைத்துவிட்டு, போலீஸாரின் உதவியைப் பெற்று, பிறகு பிணத்தை அதே சாலை வழியாக எடுத்துச் சென்று அடக்கம் செய்தனர் ஹரிஜன மக்கள்.

"நம்மகிட்ட கூலி வாங்கிப் பிழைக்கற வங்க நம்மளையே எதிர்த்து நிக்கறதா?" — மேல் சாதியினரின் வெறுப்பு விழிகளில் கோரத் தாண்டவம் ஆடியது. சர்வேயர் நட்டு வைத்த கற்களைப் பிடுங்கியதாக ஹரிஜன மக்கள் புகார் கொடுத்ததில், மேல்ஜாதியினர் ஏழு பேர் கைதாகி இருந்தார்கள். இது ஒரு பக்கம் கோபம். இந்தச் சூழ்நிலைகளில் ஜூலை 23-ம் தேதியன்று சின்னப்பா என்று ஒரு ஹரிஜனக் காலனிவாசி இறந்து போனார். அந்தப் பிணம் சாலை வழியே போக முடியாத நிலை, காரணம், சாலை வழியாகப் பிணத்தைக் கொண்டு செல்லக் கூடாது என்று ஆரணி முனிசிப் கோர்ட்டில் மேல் ஜாதியினர் வாங்கி வைத்திருந்த தடைதான். இது போல ஒரு தடையை வழங்கிய முனிசிப் கோர்ட்டை நினைத்தால் சிரிப்புத்தான் வருகிறது. பிணத்தை வீட்டில் வைத்துவிட்டு, ஆரணிக்குச் சென்று தாசில்தாரைப் பார்த்து நிலைமையை விளக்கினார்கள் ஹரிஜன மக்கள். செய்தி கலெக்டருக்குப் பறந்தது. கலெக்டர் டேனியல் குணநிதிக்கு ஒரே கோபம். அரசு போட்டுக் கொடுத்த ஒரு சாலையில், பிணம் போகக் கூடாதென்று தடை செய்யப்பட்டுள்ள சமாச்சாரம் அவருக்கு எரிச்சலை ஏற்படுத்தியது. உடனே துரிதமாகச் செயல்பட்டார். அரசாங்க வக்கீல் மூலமாகக் கோர்ட்டில் ஒரு மனு கொடுத்து தடையையே விலக்கி விட்டார்.

கிராமத்துக்கு பந்தோபஸ்துக்காக வந்துள்ள ஒரு போலீஸ் அதிகாரி ஆத்திரத்துடன் சொன்னார்: "இந்தப் புறம்போக்கு நிலத்தில், நிலம் ஒதுக்கிச் சாலை போட்டது, ஹரிஜனங்களின் வசதிக்காகத்தான். ஹரிஜனக் காலனியிலிருந்து பிணம் மேற்குப் பக்கமாக வரக் கூடாதென்று ஜாதி ஹிந்துக்கள் கூறுவது இந்த இருபதாம் நூற்றாண்டின் இறுதியில் முட்டாள்தனமான வாதம். ஊரின் முன்பாக உள்ள குளத்தைக் குடிசைகள் போட்டு ஆக்கிரமித்து, அங்கு வீடுகள் இருப்பதாகவும் பிணம் கொண்டு செல்லக் கூடாதென்றும் கூறினார்களாம் ஜாதி ஹிந்துக்கள். சுடுகாட்டை ஒரு பிணம் சென்று அடைவதற்குக் கூடத் தடை என்றால் அதைவிடக் கேவலமான விஷயம் வேறொன்றும் இல்லை. இதில் இன்னொரு வெட்கக் கேடு என்னவென்றால் இந்த ஊரில் இரண்டு சுடுகாடுகள். ஒன்று ஜாதி ஹிந்துக்களுக்கு; இன்னொன்று ஹரிஜனங்களுக்கு! சுதந்திரம்

# டெபாசிட்தாரர்களுக்கு உயர்ந்த வருமானத்தையும், பாதுகாப்பையும் இணைந்து வழங்குவது

# ஜெயசக்தி பைனான்சியர்ஸ்

(சென்னை)

A LEADING HIRE PURCHASE FINANCIERS

கவர்ச்சிகரமான வட்டி விகிதங்களில்
பிக்சட் டெபாசிட்டுகள் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன

| 1-வருடம் | 2-வருடங்கள் |
|---|---|
| 18% | 19% |
| **3-வருடங்கள்** | **5-வருடங்கள்** |
| 20% | 24% |

குறைந்த பட்ச டெபாசிட் ரூ 5000/- ஏற்றுக் கொள்ளப்படும். ரூ 10,000/-க்கு மேல் டெபாசிட் செய்யும் ஒவ்வொரு டெபாசிட்-தாரர்களுக்கும் ஊக்க போனஸாக 2% கூடுதல் வட்டி வழங்கப்படும்

உங்கள் டெபாசிட்டுகளை அனுப்பும் முகவரி

| | |
|---|---|
| சென்னை | : 39, நடேசன் தெரு (2வது மாடி)<br>சிவா-விஷ்ணு கோயில் அருகில்<br>உஸ்மான் ரோடு, தி நகர், சென்னை-600 017<br>போன் : 442218/447186 |
| பெங்களூர் | : 24/1-A, மார்கோஸா ரோடு (10 வது கிராஸ்)<br>மல்லேஸ்வரம், பெங்களூர்-560 003 போன் : 366971 |
| திருச்சி | : 22 மதுரை ரோடு (முதல் மாடி) ராஜ தியேட்டர் அருகில்<br>திருச்சிராப்பள்ளி-620 008.போன் : 31376 / 29772 |
| பாண்டிச்சேரி | : 11, நேரு தெரு (கனரா வங்கி எதிரில்) 2வது மாடி,<br>பாண்டிச்சேரி-605 001.போன் : 6493 |
| தஞ்சாவூர் | : எண் : 2 & 3 முதல் மாடி, ஜி.ஏ. கனால் ரோடு<br>தஞ்சாவூர்-613 001-போன் : 1626 |
| திருவண்ணாமலை | : 14/A, ஆனைக்கட்டி தெரு<br>திருவண்ணாமலை-606 601-போன் : 2483 |
| பட்டுக்கோட்டை | : 9/A, தலையாரி தெரு,<br>பட்டுக்கோட்டை-614 601-போன் : 453 |
| கோயமுத்தூர் | : 666, ராஜா தெரு, (முதல் மாடி)<br>கோயமுத்தூர்-614 001. |

JAY ADTS

வாங்கி 38 வருடங்களாகியும் என்ன பிரயோஜனம்? சமத்துவம் என்பதெல்லாம் பேச்சளவில்தான் நிற்கிறது! சுடுகாட்டில் கூட ஜாதி புத்தியைக் காட்டும் இந்தப் போக்கு என்றைக்குத்தான் ஒழியுமோ?''

தடை நீக்கப்பட்டதும் சின்னப்பாவின் பிணம் சாலை வழியாகச் சுடுகாடு சென்றடைந்தது. அதிலிருந்து கோபம் பன்மடங்காகப் பெருகியது ஜாதி ஹிந்துக்களுக்கு. இந்த ஹரிஜன மக்களுக்குச் சரியான பாடம் கற்பிக்க வேண்டும் என்று நினைத்தார்கள். அதன் விளைவுதான் ஜூலை 26—ம் தேதி இரவு ஹரிஜன காலனியின் மேல் நடந்த தாக்குதல். அந்தக் காலனியைச் சுற்றி நின்றுகொண்டார்களாம். ஒவ்வொரு வீட்டிற்கும் முன்னர் வைக்கோல் போட்டு எரித்து, அந்த வெளிச்சத்தில் நொறுக்கியிருக்கிறார்கள். அந்தச் சமயத்தில் அங்கு காவலுக்கிருந்த மூன்று போலீஸ்காரர்களை பயந்துகொண்டு ஊரை விட்டு ஓடி, ஒன்றரை கி.மீ. தூரத்தில் உள்ள ஒரு பஞ்சாலைக்குச் சென்று சம்பவத்தைப் பற்றி உயர் அதிகாரிகளிடம் தெரிவித்தார்களாம்!

''அந்த இருட்டுல, என்னோட ஐந்து குழந்தைகளையும் (அம்மை போட்ட குழந்தை உட்பட) கூட்டிக் கொண்டு ஓடிக் கழனிக்காட்டில் படுத்துறங்கி இரவைக் கழித்தேன்'' என்றார் திருமதி பவுன். இறந்து போன சின்னப்பா இவரது மாமனார்தான். ''எங்க காலனியே எம். ஜி. ஆருக்குத்தான் ஓட்டுப் போடுதுங்க. ஆனால் இப்போ பாருங்க. எவனும் வந்து தலையைக் காட்ட மாட்டேங்கறாங்க. அதிகாரிங்கதான் ரொம்ப உதவியா இருக்காங்க.''

''நாங்க நல்லாயிருக்கறது 'அவங்க' ளுக்குக் கொஞ்சம் கூடப் பிடிக்கலே ஸார். பொங்கலின் போது நாங்கள் புதுப் பானையில் பொங்கல் வைக்கக் கூடாது; புரட்டாசி மூன்றும் சனிக்கிழமை கும்பிடக் கூடாது; திரௌபதி அம்மன் கோயிலுக்குள் நாங்க நுழையக் கூடாது... இப்படி ஏகப்பட்ட தடைகள். அவுங்க வீட்டுச் சொத்தையா அள்ளித் திங்கறோம்? உழைக்கிறோம்; சாப்பிடுகிறோம்'' என்றார் அடிபட்டு ஆஸ்பத்திரியில் இருக்கும் ரங்கநாதன் என்னும் ஹரிஜன ஆசிரியர்.

இந்தத் தாக்குதலில் வேதனைப்பட, வெட்கப்பட வேண்டிய இன்னொரு விஷயம் என்னவென்றால், தாக்கிய மேல் ஜாதி ஹிந்துக்களில் குறைந்தது 25 பேர்களாவது பள்ளி ஆசிரியர்களாய் இருப்பவர்கள்... ''ஜாதிகள் இல்லையடி பாப்பா,'' என்று பள்ளிக் கூடத்தில் சொல்லிக் கொடுக்கும் இந்த ஆசிரியர்களே இந்த அயோக்கியத்தனத்தில் இறங்கினால் யார்தான் தாழ்த்தப்பட்ட, பிற்படுத்தப்பட்ட மக்களைக் காப்பது? மொத்த ஆசிரியர் சமுதாயத்துக்கும், இந்த ஊர் ஜாதி ஹிந்து ஆசிரியர்கள் அவமானச் சின்னங்களாக நிற்கிறார்கள்.

ஜாதி ஹிந்துக்கள் வசிக்கும் தெருக்களில் தற்போது ஆண்களே இல்லை! எல்லோரும் தலைகுனியும்படியான காரியத்தைச் செய்துவிட்டுத் தலைமறைவாக இருக்கிறார்கள். இவர்கள் வெவ்வேறு அரசியல் கட்சி அனுதாபிகள் என்றாலும் ஹரிஜனங்களை ஒடுக்குவதில் மட்டும் ஒன்று சேர்ந்துவிடுகிறார்கள்!

ஆஸ்பத்திரியில் அடிபட்டுக் கிடக்கும் ஹரிஜனங்களைப் பார்க்க ஜூலை 28—ம் தேதி வரை எந்தத் தலைவரும் வந்து போகவில்லை. அவர்கள் ஏன் தற்போது இவர்களைப் பற்றிக் கவலைப்படுகிறார்கள்? தேர்தல் வரும் போதுதானே ஹரிஜனங்கள் தயவு தேவை? மகாத்மா ஹரிஜனங்களைக் 'கடவுளின் குழந்தைகள்' என்றுதானே குறிப்பிட்டார். ஆக, அந்தக் கடவுளே அவர்களைக் காப்பாற்றிக் கொள்ளட்டும் என்று அரசியல்வாதிகள் சும்மா இருக்கிறார்களோ என்னவோ!

—தில்லப்பா.

படங்கள்: மனோகர்.

அடுத்த வாரம்:

**கர்நாடகா சிறப்பிதழ்**

கௌரவ ஆலோசகர்:

**சுஜாதா**



—அண்டை மாநிலம் பற்றி அதிசயிக்க வைக்கும் தகவல்கள்—



* நடுநாயகமாக சங்கர் ரமணி. அவரைச் சூழ்ந்துள்ள கிரிக்கெட் அணியில் அவருக்கு இருபுறமும் பரத் ரெட்டி, வி. சிவராமகிருஷ்ணன், மற்றும் டி. ஏ. சீனிவாசன், அப்துல் ஜப்பார் முதலியோர்.

# இவருக்கு ஏன் சினிமா ஆசை?

**அமெரிக்காவில் டெக்ஸாஸில் வாழும் தமிழர், தொழிலதிபர் சங்கர் ரமணி சென்னை வந்திருந்தார். சவேரா ஓட்டலில் அவரைச் சந்தித்தேன்.**

நாற்பது வயது சொல்லலாம். பூசினை மாதிரி உருவம். பந்தா இல்லாத பர்சனாலிடி. இன்றைக்கு அமெரிக்காவில் பெரிய எண்ணெய்க் கம்பெனி, கம்ப்யூட்டரும் அதன் பாகங்களும் தயாரிக்கிற கம்பெனி என்று பலவற்றுக்குச் சொந்தக்காரர். சொந்தமாய் ஜெட் விமானம் கூட வைத்திருக்கிறார்!

இவர் நாமக்கல்காரர். படித்தது அண்ணாமலை பல்கலைக் கழகத்திலும் அடுத்து சென்னை பிரஸிடென்ஸியிலும். பாடம்—ஜியாலஜி. படிப்பை முடித்துவிட்டு அடுத்த மூணு வருஷங்களுக்கு இங்கேயே ஐந்தாறு கம்பெனிகளில் வேலை பார்த்தார். கடைசியாய் வேலை செய்த கம்பெனிக்கு கனடாவுடன் கொலாபரேஷன். கனடாவிலிருந்து தொழில் நுட்ப வல்லுனர்கள் வந்து போவார்கள். அவர்களுடன் தொடர்பு ஏற்பட்டது. கனடாவுக்குப் போனால் நல்ல எதிர்காலம் என்று தெரிந்து கொண்டார். 65ல் கனடாவுக்குச் சென்று, 20 வருடங்கள் ஓடிவிட்டன.

இன்றைக்கு உயர்ந்த நிலையில் இருந்தாலும் இவரது கடந்த 20 வருட வாழ்க்கை மேடு பள்ளங்கள் நிறைந்தது. "70களில் எனது பிஸினஸ் பார்ட்னர்கள் சரியாக அமையாததால், கம்பெனிக்குப் பெரிய நஷ்டம். எனக்கு அது பெரிய அடி. ஆனாலும் மனம் தளரவில்லை. வேறு எங்காவது வேலைக்குச் சேர்ந்து விடலாம் என்று நினைக்காமல், மறுபடி பிஸினஸில் ஈடுபட்டேன். வெற்றி கிடைத்தது" என்கிறார்.

"உங்கள் வெற்றிக்குப் பெரிய பலமாய் நீங்கள் கருதுவது எதை?" என்றேன்.

"அமெரிக்காவைப் பொறுத்தவரை, கடுமையாய் உண்மையாய் உழைக்கிறவருக்கு நல்ல எதிர்காலம். இதை நான் புரிந்து கொண்டு கடுமையாய் உழைத்தேன். எனக்குக் கிடைத்த சந்தர்ப்பங்களை நான் நன்றாய்ப் பயன்படுத்திக் கொண்டேன். ஆனால் நான் உயர்ந்தவனாகிவிட்டேன் என்றோ, எதையோ சாதித்து விட்டேன் என்றோ நினைத்துக் கொள்வதில்லை. இன்னும் சாதிக்க வேண்டியவை எத்தனையோ இருக்கின்றன."

அமெரிக்காவில் பணத்தைவிட நேரம் முக்கியம். அங்கே பல்வேறு இடங்களுக்கும் போக சொந்த ஜெட் விமானத்தை இவர் பயன்படுத்துகிறார். இந்தியாவுக்குஒருதடவை குடும்பத்துடன் அந்த விமானத்தில் வருவதாய் இருக்கிறார். அதற்கு உயர் வகுப்பு விமானக் கட்டணத்தைப் போல நாலைந்து மடங்கு செலவு ஆகுமாம்!

சமீபத்தில் இவர், லண்டனுக்குப் போயிருந்த இந்திய கிரிக்கெட் வீரர்களை (சுனில், கபில் முதல் சுரேஷ் குமார், அருண் வரை) அமெரிக்காவுக்கு அழைத்து, மாட்ச்கள் ஆடச் செய்தார்.

"அமெரிக்கர்களுக்குத்தான் கிரிக்கெட்டில் ஆர்வம் கிடையாதே! பின் எதற்காக

இந்த ஏற்பாட்டைச் செய்தீர்கள்?''

''எனக்கு கிரிக்கெட் மீது அவ்வளவு ஈடுபாடு. அது என் ரத்தத்திலே ஊறிவிட்ட ஒன்று. இதுதான் முதல் காரணம். அடுத்து, பெரும்பாலான அமெரிக்கர்களுக்கு கிரிக்கெட்டில் ஆர்வம் இல்லாமல் இருக்கலாம். அவர்களிடையே கிரிக்கெட்டை பாப்புலராக்குகிற முயற்சிதான் இது. அதுவும் தவிர அங்கே எத்தனை இந்தியர்களும், பாகிஸ்தானியரும் இருக்கிறார்கள் தெரியுமா? அதனால் தான் இப்படி ஒரு டூரை ஸ்பான்ஸர் பண்ணினேன். இந்திய டீம், அங்கேயுள்ள லோக்கல் டீம்களுடன் ஆடியது. எனக்கு என் வழக்கமான பிஸினஸ் டென்ஷன்களிலிருந்து ஒரு மாறுதல்; தட்ஸ் ஆல். இதற்கு ஆன மொத்த செலவு எவ்வளவு என்கிற சரியான கணக்கு கூட எனக்குத் தெரியாது!''

''ஏதோ சினிமா எடுக்கிறீர்கள் என்று கேள்விப்பட்டேன். உங்களுக்கு ஏன் சார் இந்த ஆசை? இதில் நீங்கள் எப்படி சிக்கிக் கொண்டீர்கள்?''

லேசாய்ச் சிரிக்கிறார் சங்கர் ரமணி. ''எனக்கு சினிமாவைப் பற்றி ஒன்றும் தெரியாது. ஒரு அமெரிக்க நண்பர், இங்கேயுள்ள சில நண்பர்கள்-இவர்களுடன் சேர்ந்து இது ஒரு கூட்டு முயற்சி. சுஜாதாதான் கதை, திரைக்கதை. (இது சுஜாதாவின் ரசிகையான திருமதி ரமணியின் யோசனையாம்!) மற்றபடி எதுவும் எனக்குத் தெரியாது.''

''படமெடுப்பது ரிஸ்க்கானதில்லையா?''

''எதில்தான் ரிஸ்க் இல்லை. நான் வீஸுக்கு எடுத்த நிலத்தில் தோண்டும்போது எண்ணெய்யோ, வாயுவோ கிடைக்காமல்போகிற ரிஸ்க் இல்லையா? அது போலத்தானே இதுவும்? சினிமா எடுத்து லாபம் சம்பாதிக்கிற எண்ணமில்லை எனக்கு. லாபம் வந்தால் அதிலே இன்னொரு படம் எடுப்போம். சொல்லப் போனால், இட்ஸ் ஜஸ்ட் அவுட் ஆஃப் க்யூரியாஸிடி.''

''இந்தியாவுக்குத் திரும்பி வருகிற எண்ணம் இருக்கிறதா?''

''ம்.... ஆசை இருக்கிறது. ஆனால் முடியுமா என்பது சந்தேகம். வயதான காலத்தில் வருவேனோ என்னவோ!''

''இன்றைய இந்தியா பற்றி என்ன நினைக்கிறீர்கள்?''

''நல்ல முன்னேற்றம் காணப்பட்டாலும், முன்னேற்றத்துக்குள்ள ஒரே தடைக்கல், ப்யூராக்ரஸிதான். சிவப்புநாடாதான்.''

அமெரிக்கா போகும் முன்பே 64ல் ரமணிக்கு கல்யாணம் ஆகிவிட்டது. மனைவி 'அபயம்'. மூத்த பெண் சௌந்தரம் (13), அடுத்தவன் அருண் (11). அருணுக்கு உபநயனம் நடத்தத்தான் இந்த இந்திய டிரிப்.

— மௌஷ்மி.

# அருள் வாக்கு

**புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா**
**உன்னடி என் மனத்தே**
**வழுவாதிருக்க வரம்தர வேண்டும்.**

என்று அப்பர் ஸ்வாமிகள் சொன்ன மாதிரி, பகவத் ஸ்மரணம் எப்போதும் இருக்க வேண்டும் என்பதுதான் விஷயம். அது இருப்பதே அலாதி ஆனந்தம். இந்த ஆனந்தம் நம் அஞ்ஞான நிலையிலேயே காரிய சாத்தியமாக இருக்கும்போது, 'உடம்பு இருக்கிறதே, மனசு இருக்கிறதே; இதெல்லாம் தொலைந்து ஆத்மா மட்டும் பிரகாசிக்கவில்லையே!' என்று துக்கப்பட வேண்டாம்.

அப்பர் ஸ்வாமிகள் பக்தர்; ஆதலால் அவர் இப்படிச் சொன்னது பெரிசில்லை. ஞான மார்க்கத்துக்கு அத்வைதத்துக்கு பரமாசாரியாளாக இருக்கிற நம் சங்கர பகவத் பாதர்களே, 'சிவானந்தலஹரி'யில் ''நான் புழுவாகத்தான் பிறந்துவிட்டுப் போகிறேனே! இல்லை, கொசுவாகத்தான் பிறந்துவிட்டுப் போகிறேனே! அதனாலெல்லாம் என்ன மோசம் போய்விட்டது? இல்லை, ஒரு மாடாகத்தான் ஜன்மா எடுத்தால் என்ன? உன்னுடைய பாதத்தை ஸ்மரிக்கிற பரமானந்த வெள்ளத்தில் மட்டும் இருதயம் தோய்ந்து கிடக்குமானால், அப்போது எந்த உடல் வாய்த்தால்தான் என்ன?'' என்கிறார்.

**நரத்வம் தேவத்வம் நகவன ம்ருகத்வம்**
**மசகதா**
**பசுவத்வம் கீடத்வம்.......**

கீடம் — புழு. 'கீடத்வம்'தான் அப்பர் சொன்ன 'புழுவாய்ப்பிறக்கினும்'. மசகதா — கொசு. Mosquito இதிலிருந்து வந்தது தான். கொசுவாக இருந்து கூட பக்தி பண்ண முடியுமானால், அந்த ஜன்மா எடுக்கக் கூட பயப்பட வேண்டாம்.

மனுஷ்ய உடம்பாக இருந்தாலும் அதை வைத்துக் கொண்டே ஆனந்தமாக பக்தி பண்ணிக் கொண்டு, ஸமஸ்த பிராணிகளிடமும் நிறைந்த அன்போடு கர்மாவைச் செய்ய முடிகிறபோது, 'உடம்பு வேண்டாம், புனர் ஜன்மா வேண்டாம்' என்றெல்லாம் கூடப் பிரார்த்திக்க வேண்டியதில்லை.

எந்த உடம்பு வந்தாலும், எப்படிப்பட்ட ஜன்மா வாய்த்தாலும், அந்த பரமாத்மாவை அன்பே உருவான தாயாக பாவித்து, ஸாக்ஷாத் அந்தப் பரதேவதையின் சரணாரவிந்தத்தில் நீங்காத நினைவை வைத்து விட்டால் போதும். அவள் ஞானாம்பிகை. ஞானப்பால் கொடுக்கிறவள். நம் மனஸிலிருக்கிற அழுக்கை எல்லாம் துடைத்து விடுவாள்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

புலி மட்டும் கண்ணிலே படட்டும்.. சுட்டுத் தள்ளிடுவேன்!

அடங்காத பயங்கர வாதம்

பந்தோபஸ்து நடவடிக்கைகள்
















Rama.



கல்கி



1985 ஆகஸ்டு 11
மலர் 44 இதழ் 2
குரோதன ஆடி 27

# எப்படி வருகின்றன பயங்கர ஆயுதங்கள்?

ஏர் இந்தியா விமானம் வெடித்துச் சிதறிய பயங்கரம் ஏற்படுத்திய அதிர்ச்சியிலிருந்து நாம் இன்னும் மீண்டபாடில்லை. அதற்குள் மற்றும் ஓர் அதி பயங்கரம் நம் இதயங்களை உலுக்குகிறது. இ. காங்கிரஸ் எம். பி. யும் தொழிற்சங்கத் தலைவருமான லலித் மக்கென்னும், அவர் மனைவியும் படு கொலை செய்யப்பட்டிருக்கின்றனர்.

பிரதமர் இந்திரா கொலையுண்டது, அதையடுத்து நடந்த கலவரங்கள், பின்னர் வெடித்த டிரான்ஸிஸ்டர் குண்டுகள் எல்லாம் தலைநகர் மக்களைக் கலகலத்துப் போகச் செய்திருக்கின்றன. ஒரு நிச்சயமற்ற தன்மையுடன், உள்ளுக்குள் சங்கடப்படுத்தும் ஒரு பீதியுடன்தான் அவர்கள் அன்றாட அலுவல்களில் ஈடுபட்டு வருகின்றனர். அண்மையில் சீக்கியருடன் பிரதமர் செய்து கொண்ட ஒப்பந்தம் சற்றே நம்பிக்கையை விதைத்தது. அது முளை விடுவதற்குள் மற்றொரு காட்டுமிராண்டித்தனமான படு கொலை நடந்துவிட்டது.

இது சீக்கியத் தீவிரவாதிகளின் மற்றொரு வெறிச் செயல் என்றே முடிவு கட்டத் தோன்றும் என்றாலும் உறுதியாகச் சொல்ல முடியவில்லை. கொலைக்கான காரணம் என்ன என்பதையும் இதுவரை அறிய முடியவில்லை. பஞ்சாப் தீவிரவாதிகள், சமீபத்திய ராஜீவ் — லோங்கோவால் ஒப்பந்தத்தினால் ஏமாற்றமடைந்து தங்கள் வெறுப்பைக் காண்பிக்க முற்படுகிறார்கள் என்று சுலபமாக முடிவு கட்டி விடாமல் உண்மைக் காரணங்களை அறியப் போலீஸாரும் துப்பறியும் பிரிவினரும் தீவிர முயற்சி எடுக்க வேண்டும். முக்கியமான விஷயம் பயங்கரவாதிகளைக் கண்டு பிடித்துத் தண்டிப்பதோடு, இத்தனை சுலபமாக இவ்வளவு நவீன ஆயுதங்களைப் பயங்கரவாதிகள் எப்படிப் பெறுகிறார்கள்? இதைத் தடுத்து நிறுத்த முடியாதா? என்பதை ஆராய வேண்டும். எங்கே ஓட்டை இருக்கிறது? அப்படி ஓட்டை ஏற்பட்டதற்கு யார் காரணம்? என்பதைக் கண்டறிய வேண்டும். இது மிக அவசியம்.

நாட்டில் நடக்கும் வன்முறைகளுக்கு சினிமாக்களைக் காரணம் கூறி இனியும் தப்ப முடியாது. இன்று நடக்கும் ஒவ்வொரு பயங்கரமும் பத்து சினிமாக்களில் காணப்படும் வன்முறைகளைவிட மோசமானவை.

'காந்தி வாழ்ந்த நாட்டிலா இந்த நிலை?' என்று மேனாட்டினர் கேட்பது மட்டுமல்ல, இங்கு வருவதையும் தவிர்க்கிறார்கள். அதனால் நமக்கு ஏராளமான அந்நியச் செலாவணி நஷ்டமாகிறது. நமக்குத் தலைகுனிவோடு பொருளாதார இழப்பும் உண்டாகிறது.

இன்று அரசியல்வாதிகளும் பொது வாழ்வில் ஈடுபட்டிருப்பவர்களும் உயிரைக் கையில் பிடித்துக் கொண்டுதான் வாழ வேண்டும் என்ற நிலை ஏற்பட்டிருக்கிறது. விசனத்துக்குரிய இந்நிலை மாற, 'வன்முறையை ஆதரிக்காதீர்கள்!' என்று டீ. வி. மூலம் மக்களுக்குக் கோரிக்கை விட்டால் போதாது. நல்லெண்ணச் சூழலை உருவாக்க ஆட்சிப் பொறுப்பில் உள்ளவர்களும் எதிர்க் கட்சியினரும் இணைந்து செயலாற்ற வேண்டும்.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா—பாரதியார்.

# தீராத விளையாட்டு

## 2. விண்ணில் விளைந்த படங்கள்!

வித்தகனார் விளையாடல்
விளங்குவதில்லை கண்டேனே!

(திருவாசகம் — கண்ட பத்து)

கார்த் — அதுதான் ஸ்விடன் நாட்டவரின் பெயர் — ஸ்வாமியின் 'ஸ்வீட்னஸ்'களில் இதுகாறும் எத்தனையோ மிடறுப்பருகியவர் தான். ஒருமுறை ஸ்வாமி ஸ்வீடனிலிருந்து வந்திருந்த பக்த கோஷ்டி முழுவதையும் பேட்டிக்குத் தேர்வு செய்து அழைத்துச் சென்றபோது, தாமே உள்ளறைக்குச் சென்று ஒரு ஸ்டூலை எடுத்து வந்து, "இது என் சிங்காரப் பிள்ளைக்கு" ("for my lovely son") என்று தேனாக மொழிந்து கார்த்துக்குப் போட்டிருக்கிறார்! அது இவருக்கு முடக்கு வாதம் இருந்த ஸமயம். இன்னொரு ஸமயம் இவரை, "நீ என் 'டைமண்ட்' ஆச்சே!" என்று அருமை செய்திருக்கிறார்! ஐம்பது வயதுக் குழந்தையின் ஐம்பத்து நாலு வயதுத் தாய்!

ஆனாலும் இன்று, 1980 ஏப்ரில் 14-ந்தேதி ரௌத்ர ஆண்டு பிறந்த மறுநாள், ருத்ராம்சமே அறியாத ஸௌம்ய ரூபமாக, உதகையிலே, உதகையின் சில்லிப்பாகக் குத்தாமல், நடுக்காமல், சீத நிலாவை அள்ளித் தெளித்துக் கொண்டு ஸாயியம்மா உட்கார்ந்திருக்கிறாளே, இது போன்ற ப்ரேமானந்தத்தைக் கார்த்துமே இதன்முன் கண்டதில்லை. அவருக்கு மட்டுமே ஏகாந்தத்தில் ஏகபோக்யமான ப்ரேமானந்தம்.

கார்த், ஸ்வாமியிடம் விளக்கம் பெறுவதற்காகக் கேள்விகள் தயாரித்துக் கொண்டு வந்திருந்தார். அன்பலைகளின் இசை அணைப்பில் அவை யாவும் கரைந்தே போய்விட்டன. இசையும் கரைந்து நிறைந்தது. கேள்விக்கே இடமில்லாத ஏகப் பேரன்பாக ஸ்வாமி அமர்ந்திருந்தார். அவருடைய சேவடியில் கார்த். மோனத் தடாக விச்ராந்தி!

சிற்றலையாய் கார்த்துக்கு ஓர் ஆசை எழுந்தது. 'இந்த அமுதக் காட்சியைப் புகைப்படமெடுத்து நிரந்தரமாக்கினால் எவ்வளவு நன்றாயிருக்கும்?

கேள்வி வந்து விட்டதா? அதோடு போச்சு அமுதம்!

ஆனால், போன அமுதத்தைக் கொண்டு வர முடியாதா என்ன அற்புத மன்னனால்?

சுமார் ஒரு மாதத்துக்குப் பின் ஒன்பதாம் தேதி. ஸ்வாமி தமது பெங்களூர் இருக்கையான ப்ருந்தாவனத்தில் கார்த் தம்பதியரிடம், "நாளை 5 மணி ஃப்ளைட்டில் பம்பாய் போகிறேன். நீங்களும் உடன் வாருங்கள்" என்றார்.

தம்பதியருக்கு அந்த விமானத்தில் டிக்கெட் கிடைக்கவில்லை. எட்டு மணி ஃப்ளைட்டுக்கு டிக்கெட் எடுத்தார்கள். விஷயம் கேட்ட ஸ்வாமி, "இல்லை. ஐந்து மணி ஃப்ளைட் கிடைப்பது கஷ்டமில்லை. நீங்கள் என்னோடு வருகிறீர்கள்" என்று சொல்லிவிட்டுப் போய் விட்டார்.

அப்புறம் கேட்பானேன்? யாரோ, எவரோ வலிய வந்து உதவி செய்து கார்த்தையும் லிஸ்கோவையும் ஸ்வாமியின் விமானத்திலேயே ஸஹப்ரயாணிகளாக்கி விட்டனர்.

விமானத்தில் சென்று கொண்டிருக்கையில் ஸ்வாமி ஓர் உறையைக் கார்த்திடம் கொடுத்தார். கார்த் அதற்குள்ளிருந்ததை வெளியே இழுத்தார்.

புகைப்படம்! உதகையில் அன்று தனித்துத் தந்த தர்சனத்தை நிரந்தரமாக்கும் படம்! ஆம், அதே சூழல் — அன்று அவரும் இவரும் எப்படி அமர்ந்திருந்தார்களோ, அப்படியே காண்கிறது! **"With love, Sai Baba**, 14.4.80" என்று ஆடோக்ராஃப் போட்டுக் கொண்டு வந்திருந்த ஃபோடோக்ராஃப்!

குழந்தை போன்ற பெருமையுடன், "அங்கே ஃபோடோக்ராஃபரே இல்லாமல்!" என்றார் அற்புதர்.

அற்புதர்? அற்புத உணர்ச்சியா அப்போது விஞ்சி நின்றது? ஒரு மாதம் முன் எங்கோ நீலகிரி உச்சியில் தனிமையில் நடந்ததைப் பல நூறு மைல்களுக்கப்பால், பல்லாயிரம் அடி உயரத்தில் நீலவானில் பறக்கும் ஊர்தியில் ஸ்வாமி புகைப்படமாக்கிக் கொடுத்தாலும் — குறும்புச் சுவையூட்டி அதைக் கவரில் மூடிக் கொடுத்தாலும் — அதனால் அற்புதத்தின் ப்ரமிப்பையா ஊட்டினார்? இல்லை,



# ஸாயி



குழந்தை விளையாட்டின் அன்பின்பத்தைத் தான் ஊட்டினார்!

ப்ரமிப்பது போல அவர் செய்வதெல்லாமும் ப்ரேமிப்பதற்குத்தான்! இயல்பான அன்பைச் செலுத்த மறந்து'போன செயற்கைப் பிண்டங்களான நம்மையெல்லாம் அன்பில் கொண்டு வருவதற்கேதான் அற்புதம் செய்கிறார். அற்புதர் என்று தாம் போற்றப்படுவதை அவர் விரும்பவில்லை. அன்பர் என்று அவரை நம்மோடு இழைத்துக் கொள்வதற்கே விரும்புகிறார்.

அற்புதம் பார்த்தால்தான் மனித மனத்துக்கு, 'ஓஹோ, இங்கே நம்மிடமில்லாத ஒரு சக்தி அங்கே இருக்கிறது!' என்று அதனிடம் திரும்பத் தோன்றுகிறது. நமக்குத்தான் நூறாயிரம் ப்ரச்னைகள் உண்டே! அதனால் சக்திமான் என்று ஒருவர் இருந்தால் அங்கே தீர்வுக்கு ஓடத் தோன்றுகிறது. நம்முடைய பெரிய ப்ரச்னை அன்பாக இருக்கத் தெரியாததுதான் என்பதைத் தெரிந்து கொள்ளாமல்வேறேதோப்ரச்னைகளுக்காகஸ்வாமியிடம் போகிறோம். அவை கர்மாநுஸாரம் தீரலாம், தீராதும் இருக்கலாம். ஆனாலும் அங்கே போய்ப் போய் அந்த அன்பலைகள் மோதி மோதிக் கொஞ்சமாவது இந்தக் கல்மனமும் அன்பின் ஈரத்தை உள்ளே வாங்கிக் கொள்ளத் தொடங்குகிறது.

ப்ரமிப்பினால் எப்படி இரண்டு உள்ளம் ஒட்ட முடியும். ப்ரமிப்புக்கு ஆளாகிறவர் ப்ரமிக்க வைப்பவரை எட்ட நின்று பார்த்துத்தான் தண்டனிடுவார். அவரை அணித்து, உள்ளத்தில் அணைத்து அன்பு செய்யத்தோன்றாது. ஆகவே அதிசயிக்க வைக்காமலே அற்புதத்தைக் காட்ட வேண்டுமென்னும் போதுதான் அதை விளையாட்டு விநோதமாக்கிக் காட்ட வேண்டியதாகிறது.

'ஆக்கிக்காட்ட வேண்டியதாகிறது' என்பதால் ஸ்வாமி ஏதோ திட்டமிட்டு, ச்ரமப்பட்டுத் தாம் ச்ரமமேயின்றி விளையாட்டாக அற்புதம் செய்வது போலக் காட்டுகிறாரென்று பொருளில்லை. மெய்யாலுமே நாம் 'அற்புதம்' என்பது அவருக்கு விளையாட்டுதான்.

'மிராகிளை'ப் பெரிதாக நினைக்கக் கூடாது என்று இப்போது பலர் கூறுகிறார்களே; அவர்கள், யாவரையும் விட ஸ்வாமியின் மிராகிள்களைப் பெரிதாக நினைக்காதவர்களில் முதலிடம் பெறுவது யாரென்றால் — ஸ்வாமியேதான்!

ஓர் உண்மையைக் கொண்டு இதைப் பளிச்சென்று புரிந்து கொள்ளலாம். இன்று ஸாயி பக்தர்களிடம் வெகுவாகப் பரவியுள்ள அவரது பேரற்புதச் செயல்களில் எதுவாவது அவரே சொல்லி வெளிப்பட்டுள்ளதா? இல்லையவே இல்லையாது. தமக்குமிகவும் அணுக்கமானவரிடமும் கூட அவர் இவை பற்றிக் குறிப்பிட்டதில்லை. எப்போதேனும் அவர் திருவாயாலேயே ஓர் அற்புதத்தைச் சொன்னாலுங்கூட, அப்போதும், 'பார்த்தீரா, என் அபார சக்தியை?' என்று நாட்டுவதற்காகச் சொல்லியிருக்க மாட்டார். வேறேதோ காரணத்துக்கே வெளிப்படுத்தியிருப்பார்.

இதிலும் குறிப்பிட வேண்டியது அவரது பேரற்புதத்தால் ரக்ஷிக்கப்பட்டவர்களில் பலருக்குமே கூட இருபது, முப்பதாண்டுகளுக்குப் பின்னர்தான் அவர்களைக் காத்தது ஸ்வாமி என்று தெரிய வந்திருப்பதாகும். அதன்பின் அவர்கள் கூறித்தான் அவர் பதினான்காம் வயதில் புரிந்த ஒரு பரமாத்புதம் அவரது பொன்விழாவின்போது வெளியாகும்!

ஸ்வாமி நம் விஷயமாகப் புரிந்த அற்புத ரக்ஷணை பற்றி அவரிடம் நாம் விழுமிய உணர்வோடு கூற ஆரம்பிக்கும்போது, அந்தப் பேச்சை அவர், "யாருக்கு யார் (ப்ரமாதமாக எதுவோ செய்து விட்டது)? ஸ்வாமி ப்ரேமாதான் முக்யம்" என்று கூறி அலாக்காகக் கத்தரித்துவிட்டு, வேறு விஷயத்துக்குப் போய் விடுகிறார். இங்கே அவரது 'மிராகிள்'கள் பற்றி அவருக்குள்ள கௌரவமான கூச்சத்தை உணரலாம்.

தமது பேருரைகளிலும், இவ்விஷயத்தைத் தெளிவாகக் கூறுகிறாரே! "நீங்கள் ஸ்வாமியின் 'மிராகி'ளாக நினைக்கின்றவற்றுக்கு மிகையான முக்யத்வம் தராதீர்கள். அதிலேயே விசேஷ ஸாரத்தைக் கண்டுவிடாதீர்கள்! முக்யமானது, ஸாரமானது என் ப்ரேமை

ரா. கணபதி

தான். நான் விண்ணை மண்ணாக, மண்ணை விண்ணாக ஆக்க முடியுமென்பது திவ்ய சக்தியின் அடையாளமல்ல. எப்போதும், யாவர் குறித்தும் நான் கொண்டுள்ள ப்ரேமையும், பொறுமையும்தான் அடையாளம்'' என்பார்.

ப்ரேமையோடு பொறுமையைச் சேர்த்தது விசேஷம். அன்பினாலேயே நேராக ஈர்க்கப்படும் இயல்பான குணத்தை இழந்து, 'அற்புதத்தால்தான் ஈர்க்கப்படுவோம்; அதைத்தான் தெய்வசக்தி எனக் கொள்வோம்' என்றுள்ள மக்களிடம் அதிசயப் பொறுமை காட்டியே மிராகிள் செய்கிறார்! அப்போதும் மறவாமல், ''உண்மையான திவ்ய சக்தியை அன்பிலேயே நாடிப் பெற வேண்டும். அற்புதத்தில் அல்ல'' என்று நினைவூட்டுகிறார்.

கர்த் போன்ற ஒருவரிடம் அன்பை வர்ஷித்து விளையாட்டை விளைச்சல் செய்ததில்தான் ஸாயித்வம் சுடர் விடுகிறது. கர்த் மனோசக்தி, அதிமானுட யோக சக்தி ஆகியவற்றாலேயே திவ்ய சக்தியை நாடி, பெருமளவு எய்திய ஸாதகர். அது அவர் மார்க்கமென மதித்து, அநுமதித்து, ஆமோதித்து ஸ்வாமியேதான் வெகு குறுகிய காலத்துக்குள் அவரது குண்டலினி சக்ரங்களைத் திறந்து விட்டிருந்தார். இவ்வாறிருந்தும் அவர் ஸாதனையில் இருக்க வேண்டிய திரட்டுப் பாலைத் திரட்டுப் பாலாக்குவது அன்புச் சீனிதான் எனக் காட்டினார். எளிதாய் விழுங்கும் இனிப்பு அது என்பதால் விளையாட்டாக்கினார்!

வான வீதியில் தந்த 'எடுக்காத ஃபோட்டோ' பார்த்தோம். வான வீதியிலேயே மேலும் வெகு உயரத்திலிருந்து 'எடுத்தஃபோட்டோ' ஒன்றும்பார்ப்போம்.*

அமெரிக்க விண்வெளிக்கல நிறுவனமான 'நாஸா'வுக்கு உரிய கட்டணம் செலுத்தினால் அவர்கள் செலுத்தும் ஸாடெலைட்டுக்களிலிருந்து நாம் விரும்பும் புவிப் பகுதியைப் படம் எடுத்துக் கொடுப்பார்கள். காலிஃபோர்னியாவில் லா ஜோல்லாவைச் சேர்ந்த ஹோமர் யங்ஸ் இவ்வாறு 1972-ல் EROS உபக்ரஹத்திலிருந்து புட்டபர்த்திப் பகுதியைப் படம் பிடித்துத் தரச் செய்தார்.

இருநூறு மைல் உயரத்திலிருந்து உபக்ரஹம் க்ரஹித்துத் தந்த புகைப்படம் ஏதோ தாறுமாறாகப் பொளிந்த ஒரு பாறையின் படம் போலத்தான் இருந்தது. இருந்தாலும், 'ஸ்வாமியின் ஜன்ம ஸ்தலமல்லவா?' என்று அதையே அநுக்ரஹ ப்ரஸாதமாக மதித்தார் ஹோமர்.

ஆனால் மனைவி லீலாவோ, தங்களது வறுமை நிலையில் இப்படி ஒரு பொக்கையும் போரையுமான படத்துக்காகக் கணவர் அறுபது டாலர்கள் செலவிட்டதில் ஆரூச்சினமுற்றாள். அதற்கப்புறம் ஹோமர் அந்த நான்கு ப்ரதிகளை வெளியே எடுக்கவேயில்லை!

பல ஆண்டுகளுக்குப் பின் ஸ்வாமி அருளில் அவர்களது நிதிநிலை சற்று முன்னேறிய போது ஸாயி பக்தர் கோஷ்டியொன்று அவர்கள் வீட்டுக்கு வந்தது. அதற்கு ஸ்வாமி — ஆல்பம் காட்டிக் கொண்டிருந்த ஹோமருக்கு உற்சாகம் ஏற்பட்டு ஸாடெலைட் படத்தையும் எடுத்து வந்து கொடுத்தார் — லீலாவின் பலத்த ஆக்ஷேபத்தையும் பொருட்படுத்தாமல்! லீலைக்கு முஹூர்த்தம் வந்துவிட்டதே!

கோஷ்டியைச் சேர்ந்த ஒருவரின் கண்கள் அந்தப் புகைப்படத்தில் விழ, புகை நடுவே ஜ்யோதியைக் கண்டாற்போல் அக்கண்கள் மலர்ந்தன. படத்தை அப்படியும் இப்படியுமாகச் சுழற்றிப் பார்த்து, ''ஆஹா, ஸாயி பாபா!'' என்று ஆர்த்துக் கூறினார்.

ஆமாம், பல்லாண்டு முன் பொக்கையும் போரையுமாகத் தெரிந்த புட்டபர்த்திப் பகுதியே இப்போது ஸ்வாமியுடைய பக்கவாட்டத் திருமுகமாகத் தெரிந்தது! அவருக்கே உரிய முடி, அந்தக் கூம்பிய நயனம், திருத்தமான நாசி, முகவாய் — ஏன், இடக் கன்னத்தில் த்ருஷ்டிப் பொட்டுப் போல் உள்ள மறுவும் கூட விண்கல ஃபோட்டோவில் தெளிவாகத் தெரிந்தன!

(தொடரும்)

* நன்றி: ஸ்ரீமதி சகுந்தலா பாலுவின் Living Divinity.

---



கேள்வி: ''உங்கள் பாடலில் 'தாகம்' 'பூவே' — போன்ற சொற்கள் அடிக்கடி வருகிறதே?''

பதில்: ''மணி என்ற சொல்லின் மீது பாரதிக்கு மாறாத காதல். 'அமுது' என்றசொல்லின் மீதுபாரதிதாசனுக்கு அடங்காத ஆசை. 'சுகம்' என்ற சொல்லின் மீது கண்ணதாசனுக்கு சொல்ல முடியாத சுகம்.

100 வார்த்தைக்கு ஒரு முறையாவது, இவர்கள் கவிதைகளில் இந்த சொற்களை பார்க்க முடியும். இவர்களுக்கெல்லாம், வார்த்தைப் பஞ்சமா? சில சொற்களின் மீது எனக்கு மயக்கம் என்பது உண்மையே தவிர, சொல் பஞ்சம் என்பது உண்மையில்லை.

ஒரு பேட்டியில் வைரமுத்து

தகவல்: ஆர். வசந்தகுமார்.

**துரைமதி.** **தஞ்சை—1.**

*** உங்கள் படங்களின் ரசிகர்கள் பலர் பலகட்சிகளின் ஆதரவாளர்களாக இருக்கும் போது குறிப்பிட்ட அரசியல் கட்சியில் மட்டும் நீங்கள் தீவிரம் காட்டுவது நியாயமாகுமா?**

* தனக்குப் பிடிக்காதவங்க வந்துட்டாங்கங்கிறதுக்காகப் பூசாரி பூஜையைப் பாதியிலே நிறுத்திட மாட்டாரு! பூசாரியைப், பிடிக்கலேங்கிறதுக்காகப் பக்தர்கள் யாரும் சாமி கும்பிடறதை விட்டுட மாட்டாங்க!! சாமியும் பக்தியும் எப்படியோ அப்படித்தான் சினிமாவும் ரசனையும். பாக்யராஜ் என்ற தனி மனிதன் எம். ஜி. ஆருக்கு நெருங்கின சொந்தக்காரன். ஆனால்! பாக்யராஜ் என்ற கலைஞன் எல்லாருக்குமே நெருங்கின சொந்தம்.

**என். சிவன் பிள்ளை.** **நாகர்கோவில்.**

*** நடிகர் பாக்யராஜின் நடிப்பு திருப்தியாக இல்லே என்று டைரக்டர் பாக்யராஜ் எப்போதாவது கோபிக்க நேர்ந்தது உண்டா?**

* கோவிச்சு கோவிச்சு... இப்ப சகிச்சுப் பழகி விட்டார்!

**பா. சுவாமிநாதன்.** **கோவில்பட்டி.**

*** என்ன பாக்யராஜ் சார்!**
**உங்களுக்குத் தெய்வத்தின்மேல் நம்பிக்கை உண்டா?**

* சாமி நமக்கு நல்லது பண்ணும் என்ற நம்பிக்கையை விட நாம் தப்பு பண்ணினால் கண்டிப்பா தண்டிச்சுடும் என்ற பயம்தான் அதிகமா இருக்கு. இது கடைசிவரை இருந்தால் போதும்னு நினைக்கிறேன்.

**பி. பி. சௌந்திரபாண்டியன்.** **இராசபாளையம்.**

*** திரு. பாக்யராஜ் அவர்களே!**
**இலங்கைத் தமிழருக்கு ஆறுதல் அளிக்கும் வகையில் தாங்கள் மனமுவந்து செய்யப் போகும் உதவி என்ன?**

* வெளியே சொல்லும் உதவிக்குப் பெயர் விளம்பரம்.

**ஏ. ஸ்ரீனிவாசன்.** **அரூர்.**

*** இந்தி கைதியின் டைரி படப்பிடிப்பில் அமிதாப் பச்சனுடன் பணியாற்றிய அனுபவம் பற்றி?**

* லைட் எவ்வளவு உயரத்தில் இருந்தாலும் 'ஸ்விட்ச்' நம்ம கைக்கு எட்ற கண்ட்ரோல்லதான் வச்சிருக்கோம். இதை அமிதாப் நல்லா புரிஞ்சிருக்காரு. பட்டம் எவ்வளவு தூரம் பறந்தாலும் அதோட பாதுகாப்பு கீழ் உள்ளவர் கையில்தான் உள்ளது. 'ஸ்கிரிப்ட்' மேலே அவர் காமிக்கிற இண்ட்ரஸ்ட்டும் டெக்னிசியன்களுக்கு அவர் குடுக்கிற மரியாதையும் இதைத்தான் உணர்த்துகின்றன. 'சூப்பர் ஸ்டாராக' இருந்தாலும் நல்ல கதைகளுக்கு மரியாதை அவர் மனசிலிருக்கு. அவர் உயர்ந்த மனிதர்.

இன்னும் சுருக்கமாச் சொல்லணும்னு தான் உயரமா இருந்தாலும் அடுத்தவங்களை குனிஞ்சு பார்த்துப் பேசறது இல்லே அவர்!

**ஜி. ஷைலஜாராணி.** **நாகர்கோவில்—1.**

*** தாவணிக் கனவுகள் படத்தை இன்னும் சிறப்பாகச் செய்து இருக்கலாம் என்று நீங்கள் நினைத்தது உண்டா?**

* எல்லாப் படத்திலேயும் அந்த நினைப்பு உண்டு.

# பாக்யராஜ் பதில்கள்



**குமாரி. ஜெய்.** **சென்னை—5.**

*** 'தாவணிக் கனவுகள்' படத்தில் மெசேஜ் சொன்னதால்தான் அந்தப் படம் எதிர்பார்த்த வெற்றியைத் தரவில்லை என்று சொல்கிறீர்களே!**

**எம். ஜி. ஆர். படம் ஒவ்வொன்றிலும் மெசேஜ் இருக்குமே அவைகள் வெற்றி பெற்றுத்தானே வந்திருக்கின்றன?**

* 'மெசேஜ்' சொன்னதல்ல என் வாக்கு மூலம்.

'மெசேஜில்' மட்டுமே கவனம் செலுத்தி விட்டேன் என்பது.

**செல்வி. சுதா.** **சென்னை.**

*** எழுத்தாளர் சுஜாதாவின் கதை உங்கள் கைவண்ணத்தில் திரைப்படமாக வெளிவருமா?**

* 'உங்களுக்குத் தகுந்த மாதிரி நான் எழுதி அனுப்பறேன்'னு சொல்லிட்டுப் போயி

* "மெஸ்ஸேஜ் சொன்னதல்ல என் வாக்கு. மூலம்..."

ரொம்ப நாளாச்சு! ஒரு தகவலும் இல்லே. ஆனா நம்பிக்கை இருக்கு.

திருமதி. ஜமுனா ராஜேந்திரன். குடியாத்தம்.

* கோயம்புத்தூர் தமிழராகிய தாங்கள் வசனங்களில் சந்தோசம், வேசம் என்று வடமொழி 'ஷ' கலக்காமல் பேசுவது தமிழ்ப் பற்றினுலா? அல்லது 'ஷ' தகராறு?

* திருமதியே! பல தகராறில் இது ஒரு தகராறு!

திக்குவாய்க்காரன் சும்மாவே பாம்புன்னு சொன்னு பா... பா... பாம்புன்னு ஐந்தாறு 'பா' போட்டுத்தான் சொல்லுவான். இதில் அவன் பாம்பையே பாத்துட்டா எப்படிச் சொல்லுவான்!

திருமதி. இளமதி. ஈரோடு.

* தங்களின் அன்பு மகள் சரண்யாவின் எதிர்காலம் கலைத்துறைதானு?

* சின்ன வயசுல சினிமா பாத்ததுக்கே நான் செருப்படி வாங்கின நாள் உண்டு. நல்ல படிப்பு படிக்கணும்; நல்ல தொழில் பண்ணணும்கிறது வீட்ல இருந்தவங்க அபிப்பிராயம். பிடிவாதமோ, மொட வாதமோ நான் இதுல வந்துதான் பேரு வாங்கி இருக்கேன்.

நான் ஒண்ணு சொல்லி என் குழந்தை என் மூஞ்சியில கரியைப் பூசறதுக்கு இஷ்டமில்லே.

'உன்னைப் பத்தி கரெக்டா தெரிஞ்ச ஒரே ஆள் நீதான்'. இது பிரெஞ்சு பழமொழி இல்லே – நம்ம பாலிசி!

கல்கத்தாவில் நான் ஒரு சினிமா தியேட்டரின் அருகில் வசிக்கிறேன். 3 வருடங்களாக அந்த தியேட்டரின் வெளிப்புறமுள்ள ஒரு இடத்தில் ஒரு பிச்சைக்காரன் பிச்சை எடுத்து வந்தான். திடீரென்று ஒருநாள், அவன் தனது இடத்தை தியேட்டருக்கு வாயிலிலிருந்து எதிர்புறம் மாற்றிக் கொண்டுவிட்டான். எனது ஆவல் அதிகரித்தது. அவனை காரணம் கேட்டேன்.

அவன் சொன்னுன், "அதுவா சார், நேற்று என் மாப்பிள்ளைக்கு அதை தந்து விட்டேன் – வரதட்சிணைக்காக."

– லட்சுமி நடராஜன்.

– ஆதாரம்: மிர்ரர்.



# உணர்வுகள் உறங்குவதில்லை

## ஏ.சு.நல்லபெருமாள்

### சென்ற வாரம்

**சந்திரசூடன் :**

வயது நாற்பது. பிரபல வாரப் பத்திரிகையின் துணை ஆசிரியர். சிந்தனையைத் தூண்டும் எழுத்தாளர்.

**ராதா :**

சந்திரசூடனின் எதிர்வீட்டுப் பெண். அழகும் அறிவும் ஒருங்கே கொண்டவள். ''வாழ்க்கை என்பது ஒரு தேடல். நிம்மதியான இரவைத் தேடிப் பெறுவது தான் வாழ்க்கையின் அடிப்படை'' என்ற தன் தத்துவத்தால் சந்திரசூடனை அசத்தியவள்.

**கோபால்:**

ராதாவின் கணவன், குடிகாரன்; சூதாட்டக்காரன்; ராதாவுக்குத் துளியும் பொருத்தமில்லாதவன்.

**பரணி :**

ராதா வீட்டில் தன் பாட்டியுடன் தங்கி பி.ஏ. முதலாண்டு படிக்கும் மாணவன்.

*******

ஒரு மார்கழி மாதத்து இரவு இரண்டு மணிவரை தூங்காமல் கட்டிலில் உட்கார்ந்து வெற்றிலையைக் குதப்பிக் கொண்டிருந்தார் சந்திரசூடன்.

எதிர் வீட்டில் ஓசை கேட்கவும் ஆட்டோவில் வந்திறங்கும் கோபால் குடி போதையில் தள்ளாடியவாறே விழுவதைக் காண்கிறார். திண்ணையில் படுத்திருந்த பரணி எழுந்து போய்க் கோபாலை உள்ளே அழைத்துச் செல்ல ராதாவுக்கு உதவுகிறான்.

மறுநாள் காலை ராதா ஓங்கி 'பம்பி'ல் தண்ணீர் அடிக்கும் ஓசை சந்திரசூடனை எழுப்புகிறது. அவளிடம் அவருக்குக் கழிவிரக்கம் ஏற்படுகிறது. கோபால் மீது ஆத்திரம் கிளம்புகிறது. அந்தச் சமயத்தில் பரணி வந்து நடிகை இந்திராணி இறந்து விட்டதாகச் செய்தி சொல்லவும் சந்திரசூடன் அதிர்ந்து போகிறார். ஆற்றாமை உணர்வு அவரை அழுத்த 'அடிப் பாவிப் பெண்ணே' என்று முணுமுணுக்கிறார்......

### 2. கவர்ச்சிப் புயல்

இந்திராணியின் மரணம் பெரும் பாதிப்பை ஏற்படுத்தி விட்டது. 'தற்கொலையா அல்லது இயல்பான மரணமா?' என்பதே புரியவில்லை. கட்டிலின் அருகே தூக்க மாத்திரை பாட்டில் இருந்ததாம். தினமும் அவள் இரவில் தூக்க மாத்திரைகளைப் பயன்படுத்துவது வழக்கந்தானாம். அன்று மாத்திரைகளின் எண்ணிக்கை அதிகமாகி விட்டதால் ஏற்பட்ட மரணம் என்பது டாக்டர்களின் கண்டுபிடிப்பு. வேண்டுமென்றே மாத்திரைகளை அதிகமாக உட்கொண்டாளா? அல்லது தவறுதலாக அதிகமான மாத்திரைகளை விழுங்கி விட்டாளா என்பது யாருக்கும் தெரியாத புதிர். மரணம் பற்றிக் குறிப்பும் அவள் எழுதி வைக்கவில்லை.

ஒவ்வொரு பத்திரிகை ஒவ்வொரு கதையை அளந்தது. ஆனால் ஒரு கேள்வி மட்டும் எல்லாரையும் திணறடித்துக் கொண்டிருந்தது. தற்கொலையாக இருக்குமானால், அவள் ஏன் தற்கொலை செய்திருக்க வேண்டும்?

அழகு, புகழ், பணம், செல்வாக்கு நான்குமே அவளிடம் அபரிமிதமாக இருந்தன. புகழின் உச்சகட்டத்தில் இருந்த நேரம் அது. அப்படி இருக்கும் போது மரணத்தை நாடுவானேன்...?

சந்திரசூடனுக்குத் தெரியும் அது தற்கொலைதான் என்று. அதனுடைய காரணத்தையும் ஊகித்திருந்தான். இரண்டு நாட்களுக்கு முன்பு அவருக்கு எழுதியிருந்த கடிதத்தில், 'சந்திரன், நான் தோற்றுப்போனேன். வெற்றி உங்களுக்குத்தான். போதுமா? திருப்திதானா?' என்று கேட்டிருந்தாள்.

அந்தக் கடிதம் அவருக்கு உற்சாகத்தைக் கொடுக்கவில்லை. அவள் கூறியிருந்த வெற்றி அவரைப் பொறுத்தவரை வெற்றியாக இல்லை. இப்போது அவளுடைய மரணம் அவருடைய தோல்வியாகவே தோன்றியது. அவளுக்காக உள்ளூரக் கசிந்து, மனம் இரங்கியது. தம் மீதே அவருக்குக் கோபம் வந்தது. அவளுடைய ஆசையை நிறைவேற்றியிருக்கலாம். ஆனால் அவர் பேனாவைக் கையில் எடுத்துவிட்டால் நக்கீரர் குணம் வந்துவிடும்.

வசிஷ்டர் வாயால் 'பிரும்மரிஷி' என்று அழைக்கப்பெற வேண்டும் என்ற ஒரே வெறி அவளுக்கு. ஆனால் இந்த வசிஷ்டர், கல்நெஞ்சராக அல்லவா இருந்துவிட்டார். அவளை நடிகை என்றே சந்திரசூடன் ஒப்புக்கொள்ளவில்லை. அவளைப் பற்றி எழுதிய போதெல்லாம் சினிமா நட்சத்திரம், கவர்ச்சி நட்சத்திரம் என்றுதான் எழுதினாரே தவிர,

ஒரு முறை கூட நடிகை என்று ஒப்புக்கொண்டு எழுதவே இல்லை. நடிக்கத் தெரியாதவளை எப்படி நடிகை என்று எழுதுவது என்பதுதான் அவருடைய வாதம்.

அவர் மட்டும் அவளை ஒரு சிறந்த நடிகையாக ஒப்புக்கொண்டு புகழ்ந்து எழுதியிருந்தால் அவளுக்கு 'ஊர்வசி' பரிசு கிடைத்திருக்கும். அந்தப் பரிசைப் பெறத்தான் அவள் ஏங்கினாள். கலை உலகின் தலைசிறந்த விமர்சகரான சந்திரசூடனின் ஒப்புதலைத்தான் ஊர்வசிப் பரிசுக் குழு எதிர்பார்த்தது. ஆனால் சந்திரசூடனின் பேனா, கடைசிவரை அவளைப் புகழ மறுத்து விட்டது. இவருடைய இந்தப் பிடிவாதத்தைத்தான் இவருடைய வெற்றியாகக் கருதி இந்திராணி கடிதத்தில் எழுதியிருந்தாள்.

ஒருநாள், அவள் கோபத்துடன் கேட்டாள்: ''நான் வெறும் இந்திராணி இல்லை. சினிமா உலகில் முடிசூடா மகாராணி. இதை ஒப்புக்கொள்கிறீர்களா?''

''நீ சினிமா உலகில் ஒரு புகழ்பெற்ற நட்சத்திரம். பாப்புலர் ஸ்டார் அவ்வளவுதான். ஆனால் சிறந்த நடிகை என்று ஒப்புக்கொள்ள முடியாது.'' என்றார், சந்திரசூடன்.

''என் புகழும் செல்வாக்கும்...''

''கொச்சையாகச் சொல்லப் போனால் உன்னுடைய உடல்தான் காரணம்.''

''சந்திரன், என்றாவது நான் உங்களை வெல்லத்தான் போகிறேன். உங்கள் பேனா, என்னை நடிகை என்று ஒப்புக்கொள்ளாமல் நான் விடப் போவதில்லை. ஊர்வசிப் பரிசை நான் பெற்றே தீர்வேன்.''

அவளுக்குத்தான் எவ்வளவு பெரிய தோல்வி. ஆனால், அந்தத் தோல்வியை ஒப்புக்கொண்டு அவருக்கே கடிதம் எழுதியது, ''இந்தா வைத்துக்கொள் உன் வெற்றியை,'' என்று அவருடைய முகத்தில் ஓங்கி அறைந்தது போலிருந்தது.

அவள் இறந்துவிட்டாள் என்பதையே முதலில் அவரால் நம்ப முடியவில்லை. அன்று காலையில் அவளுடைய வீட்டின் முன் அறையில் மலர்ப் படுக்கையில் கிடத்தப்பட்டிருந்த அவளுடைய உடலைக் கண்ட பிறகுதான் அவர் உண்மையை உணர்ந்தார்.

அவளுடைய வீட்டை அவர் நெருங்கிய போது மக்கள் கூட்டம் மொய்த்துக்கொண்டிருந்தது. வீட்டைச் சுற்றிப் போலீஸ் படை நின்று கொண்டு கூட்டத்தைக் கட்டுப்படுத்திக் கொண்டிருந்தது. தம்முடைய நிருபர் அனுமதிச் சீட்டைக் காட்டிவிட்டுத்தான் உள்ளே அவரால் போக முடிந்தது. கூட்டத்தை விலக்கிக் கொண்டு வீட்டிற்குள் போவதற்குள் மூச்சுத் திணறிவிட்டார். முன் வராந்தாவில் அவர் சென்ற போது, எதிரே ஓடி வந்தார், சம்பத்.

''டேய், வாயில் மண்ணைப் போட்டு விட்டுப் போய் விட்டாள்,'' என்று அரற்றினார், சம்பத்.

சந்திரசூடன் மௌனமாக தன் அறையை நோக்கி விரைந்தார். சம்பத் பின் தொடர்ந்தார். ''இவளுடைய வருங்காலத்தைப் பற்றி



எப்படியெல்லாம் கனவு கண்டிருந்தேன். எல்லாவற்றையும், ஒரு நொடியில் சிதைத்து விட்டுப் போய் விட்டாளே!'' என்றார்.

சந்திரசூடன் கோபத்துடன் திரும்பினார். ''இவளுடைய வருங்காலத்தையா, உன்னுடைய வருமானத்தையா?'' என்று சம்பத்தின், காதருகே குனிந்து கேட்டபோது சம்பத் அடங்கி விட்டார்.

இந்திராணியின் உடல் முன் சிறிது நேரம் உற்றுப்பார்த்து நின்றார். எத்தனையோ நினைவுகள்!

பட்டு என்ற ஓர் ஏழைப் பெண் ரெங்கபுரம் கிராமத்தின் மாமரத் தோப்பு வழியாகத் தண்ணீர் எடுத்துவர வாய்க்காலுக்குக் குடத்துடன் சென்ற காட்சியிலிருந்து, அவளுடைய பல பருவங்கள் நினைவில் விரிந்தன. ஒரு நீண்ட பெருமூச்சை விட்டவாறே அந்த இடத்தை விட்டு விலகி ஒரு ஓரமாகப் போய் நின்றார்.

அவளுக்கு இறுதி மரியாதை செலுத்துவதற்காகப் பல பிரமுகர்கள் வந்து கொண்டிருந்தனர். முதலமைச்சர், மந்திரிகள், புடை சூழ வந்து மலர் வளையம் வைத்துவிட்டுச் சென்றார். கவர்னர் வந்த போது, போலீஸின் கெடுபிடி அதிகமாயிருந்தது. வீதியில் மக்கள் வெள்ளம் கரைபுரண்டது.

எல்லாவற்றையும் கவனித்தவாறு சந்திரசூடன் வராந்தாவில் அமர்ந்திருந்தார். திரை உலகின் 'பெரும்புள்ளி'கள் வந்த போது, பெரும் பரபரப்பு இருந்தது. இந்திராணியின்



கவர்ச்சியிலும், புகழிலும் பொறாமை கொண்டு புழுங்கிக் கொண்டிருந்த நடிகைகள் பலர் அங்கு வந்து கண்ணீர் சிந்தி நடித்தனர்.

ஜி.கே. கம்பெனி பட அதிபர், கேசவன் உள்ளே வந்தபோது சோகமே உருவாயிருந்தார். ஜி.கே. கம்பெனிக்கும் இந்திராணிக்கும் மிகுந்த நெருக்கம். இந்திராணியைத் திரை உலகிற்கு அறிமுகப்படுத்தியவரே கேசவன்தான். அவருடைய ஒரு படத்தில் குரூப் டான்ஸில் பங்கு கொள்ளும் வாய்ப்பை முதலில் கொடுத்தார். அப்போது அவருக்கே தெரியாது, வருங்காலத்தில் திரை உலகையே ஆட்டிப் படைக்கப் போகும் பெரும் சக்தி, ரசிகர்களைப் பாடாய்ப் படுத்தப் போகும் மோகினி, தம்முடைய படத்தில் ஒரு மூன்று நிமிடங்கள் தோன்றியிருக்கிறது என்று.

சந்திரசூடனைக் கண்டவுடன் கேசவனின் கண்கள் கலங்கின. ''சந்திரன் சார், புகழின் உச்சநிலையிலிருக்கும்போது இப்படிச்செய்து விட்டாளே'' என்று ஆற்றாமைப்பட்டார். பிறகு சொன்னார்: ''ஒரு வகையில் நாம் இருவருமே இவளுக்குக் கொடுமை செய்து விட்டோம்.''

சந்திரசூடன் குற்றச்சாட்டை ஏற்றவாறு நின்றார். கேசவன் சொன்னார்: ''அவளுடைய பெரிய ஆசை, ஒரு படத்திலாவது சீரியஸ் ரோல் செய்ய வேண்டுமென்று. நான் சந்தர்ப்பம் கொடுக்காமலே இருந்து விட்டேன்.''

அவருக்கு மிகுந்த கழிவிரக்கம் தோன்றியது. குற்ற உணர்வு அழுத்தியது. சந்திரசூடன் மௌனமாயிருந்தார். அந்த விஷயத்தில் யாரும் தவறு செய்யவில்லை என்பது அவருக்குத் தெரியும். இந்திராணி தனக்குத் தகுதி இல்லாத ஒன்றை எதிர்பார்த்தாள். கடைசிவரை கிடைக்கவில்லை.

கேசவன் சொன்னார்: ''சந்திரன் சார், நானாவது லாபம் நஷ்டம் பார்க்கிறவன். சீரியஸ் ரோல் அவளால் முடியாது. படத்தில் நஷ்டம் ஏற்பட்டுவிடக்கூடாது என்பதற்காக நான் மறுத்துவிட்டேன். ஆனால் நீங்களாவது ஒருமுறை அவளை நடிப்பிற்காகப் புகழ்ந்திருக்கலாம். திருப்தியடைந்திருப்பாள்.''

'நீர் தொழிலில் லாபநஷ்டம் பார்த்தீர். நான் எழுத்தில் கண்ணியம் பார்த்தேன். உண்மை அவளைச் சுட்டுவிட்டது' — என்று சந்திரசூடனின் மனம் முனகியது.

மாலையில் நடைபெற்ற இறுதி ஊர்வலத்தில் ஜனத்திரள் கட்டுக்கடங்காததாயிருந்தது. மயானத்தில் பலர் புகழ்ந்து பேசினார்கள்.

சந்திரசூடன் பேசிய போது, ''இன்றையத் திரை உலகின் மாபெரும் சொத்து மறைந்து விட்டது. திரை உலகம் திடீரென்று வறுமைப் பட்டு விட்டது. இனி, இதுபோன்ற தங்கச் சுரங்கம் படாதிபதிகளுக்குக் கிடைப்பது அரிது.'' என்றார்.

மயானச் சடங்குகள் முடிந்த பிறகு சம்பத்தின் காரில் சந்திரசூடன், வீடு திரும்பிக்




கொண்டிருந்தார். சம்பத் காரை ஓட்டி வந்தார்.

"என் பிழைப்பில் மண்ணைப் போட்டு விட்டுப் போய் விட்டான்" என்றார், சம்பத்.

சந்திரசூடன் மௌனமாகத் தெருவைப் பார்த்துக் கொண்டிருந்தார். மனம் நினைத்தது — இவளை வைத்துத்தான் எத்தனை பேர் பிழைப்பு நடத்தினார்கள்! சினிமா உலகில் இவளால் கோடி கோடியாகப் பணம் புரண்டது. பிச்சை எடுக்கும் நிலைக்கு வந்திருந்த பல பட முதலாளிகள் இவளால் இன்று கோடீஸ்வரர்களாயிருக்கிறார்கள். இதோ இருக்கிறானே சம்பத். இவன் சம்பாதித்திருக்கும் பணத்திற்கு அளவேது? ஆரம்ப காலத்தில் பத்திரிகைகளுக்குப் புகைப் படம் எடுத்துக் கொடுத்து வயிற்றைக் கழுவியவன். இன்று இந்திராணியை வைத்துச் சம்பாதித்து விட்டானே —

ஆனால் ஒரு வகையில் இந்திராணியின் புகழுக்கு சம்பத்தும் ஒரு காரணந்தான். சம்பத்தின் காமிரா, அவளை எப்படியெல்லாமோ உலகிற்கு எடுத்துக் காட்டியது. அவளுடைய உடலையே ஒரு கலையாக வடித்துக் கொடுத்தவர் சம்பத்தான். அதே போல் அவரையும் கலை உலகிற்கு அறிமுகம் செய்தவள் இந்திராணிதான். அவளுடைய அறிமுகம் கிட்டிய பிறகுதான் உலகிற்குச் சம்பத்தின் புகைப்படத் திறமை பற்றித் தெரிந்தது.

சந்திரசூடனும் சம்பத்தும் காரிலிருந்து இறங்கி, சந்திரசூடனின் மாடி அறைக்குச் சென்ற போது, வாசலில் பரணி நின்று கொண்டிருந்தான்.

"சார், கூட்டம் எக்கச்சக்கம் போலிருக்கிறதே. நான் வந்தேன். உள்ளே வரவே முடியவில்லை," என்றான்.

சந்திரசூடன் வியப்புடன் அவனைப் பார்த்தார். "உனக்குத்தான் அவளைப் பிடிக்காதே" என்றார்.

"இருந்தாலும், புகழ் பெற்ற சினிமா நட்சத்திரமாயிற்றே. ஒரு முறையாவது நேரிலே பார்த்து விடலாமே என்றுதான் வந்தேன்," என்று சிரித்தான், பரணி.

"பிரேதத்தைப் பார்த்து என்ன செய்ய?"

"இப்படிப் பிரேதமாகிப் போய்விட்ட அந்த உடலை இந்த உலகம் எப்படி வெறித்தனமாய்ப் புகழ்ந்தது?" என்றான் பரணி, அலட்சியமாக.

பரணி தத்துவம் பேசியதை எண்ணிச் சந்திரசூடன் சிரித்தார். "உனக்கு இந்த இரகசியம் புரியாது. நீயோ பெண் வாடையே கூடாது என்று வீம்பு செய்கிறவன்" என்றார்.

"சார், இவளுக்கு இவ்வளவு கூட்டம் பைத்தியக்காரத்தனமாகக் கூடியதே; இவள் என்ன சாதித்திருக்கிறாள் இந்தச் சமுதாயத்திற்கு? உலகத்திற்கு இவளால் என்ன சார், நன்மை?"

"சில விஷயங்களில் பகுத்தறிவைப் பயன்படுத்தி லாபக் கணக்குப் பார்க்க முடியாது. எல்லாமே சில ரசனைகள்தாம். அறிவுபூர்வமான தர்க்கத்திற்குள் இது அடங்காது. மனிதனுக்கு அறிவு மட்டுமில்லாமல் மனமும் இருக்கிறதே," என்றார்.

பரணி வெறுப்புடன் முகத்தைச் சுளித்தான். பிறகு, "சார், உங்களுக்கு ஒரு கடிதம் வந்திருக்கிறது. மேஜை மீது வைத்திருக்கிறேன்," என்று கூறிவிட்டுக் கீழே போய்விட்டான்.

சிறையிலிருந்து ஒரு கைதி எழுதியிருந்தான். முத்துராமன் என்று பெயராம். அவருடைய ரசிகனாம். அவருடைய எழுத்தில் ஆழ்ந்த ஈடுபாடு உண்டாம். பி.ஏ. பட்டதாரியாம். சந்தர்ப்பவசத்தால் சிறையில் இருக்கிறானாம். அவரைச் சந்திக்க மிகவும் ஆவலுடன் இருக்கிறானாம். ஒருமுறை அவனுக்காக அவனைச் சந்திக்கச் சிறைக்கு வர இயலுமா என்று கேட்டு எழுதியிருந்தான்.

கடிதத்தை மேஜை மீது போட்டுவிட்டுக் கட்டிலில் அமர்ந்த சந்திரசூடன், ஸ்டூலில் இருந்த வெற்றிலைப் பெட்டியை எடுத்தார்.

"இந்திராணியின் வாழ்க்கையைப் பற்றி நீ ஒரு புத்தகம் எழுத வேண்டும். மாதவிப் பதிப்பகம் செட்டியார் அதைப் பிரமாதமாக அச்சிடப் போகிறாராம்."

"அவள் செத்த பிறகும் விடமாட்டார்கள் போலிருக்கிறது."

"உனக்குத்தான் இந்தப் புத்தகத்தை எழுத அருகதை உண்டு. சிறு வயதிலிருந்தே அவளோடு நீ பழக்கமானவன். சிறந்த விமர்சகன் என்ற முறையிலும் நீதான் இதை எழுத முடியும். அவளுடைய அந்தரங்கமெல்லாம் உனக்குத்தான் நன்றாகத் தெரியும்."

"ஓ, என்னையும் ஒரு கவர்ச்சி எழுத்தாளனாக ஆக்கப் பார்க்கிறீர்களா?"

"சினிமாக்காரியின் அந்தரங்கந்தானே ரசிகர்களின் ஜீவநாடி?"

"அதற்கு?"

"நீ எழுத வேண்டும்."

"முடியாது."

"முன் பணமாக உனக்கு எவ்வளவு வேண்டுமானாலும் செட்டியார் கொடுக்கத் தயார்."

"நான் எழுத மாட்டேன்" என்று சந்திரசூடன் திட்டவட்டமாகச் சொன்னார்.

"சாவதானமாகச் சிந்தித்துச் சொல். இப்போது உன் மனம் சரியாக இல்லை. நான் போய் விட்டுப் பிறகு வருகிறேன்," என்று கூறிவிட்டுச் சென்றார், சம்பத்.

சந்திரசூடன் வெற்றிலையை வாயில் ஒதுக்கியபடியே கட்டிலில் மல்லாந்து படுத்தார். அவருடைய மனம் இந்திராணியின் வாழ்க்கையைப் பற்றி எண்ணிக் குமைந்து கொண்டிருந்தது.

(தொடரும்)

விவரமறிந்தோர் நாடுவது

# ஆஸ்ப்ரோ ஆறுதல்

இப்போது 2 வித வீரிய வகைகளில் வருகிறது.

**ஆஸ்ப்ரோ , ஆஸ்ப்ரோ 600**



சாதாரண தலைவலிக்கு









மண்டை பிளக்கும் கடுமையான தலைவலிக்கு

**ஆஸ்ப்ரோ**

எக்ஸ்ட்ரா ஸ்ட்ரெங்த்

**ஆஸ்ப்ரோ 600**

da Cunha/AS/35/85

'அந்தி மழை எப்போது விடுமோ' என்று ஆயாசப்பட்டாள் அம்மா. அப்போது, 'வீட்டு வாசலில் பேச்சுக் குரல் கேட்கிறதே' என்று வெளியில் வந்து பார்த்தாள், ஓர் இளம் பெண். பச்சைப் பாவாடை கட்டிய பதினெட்டு வயசு செழுமை உடல் முழுக்க நாயனம் வாசித்தது.

# அந்தி மழை பொழிகிறது

தமிழினியன்

கோடை மழை.

டொப்.... டொப்பென்று ஆலங்கட்டியாய்க் கொட்ட ஆரம்பித்தது.

கையிலிருந்த மாலைப் பதிப்பை வழுக்கைத் தலைக்கு மேலே ஏந்திக் கொண்டு சுற்றுமுற்றும் பரபரப்புடன் ஆராய்ந்தார், அந்த மனிதர்.

எல்லாம் ஓரம் விடாமல் கட்டிய நவீன பாணி வீடுகள். இரும்புத் தாமரைக் கதவுகளால் இறுக மூடப்பட்டிருந்தன. இரண்டு இலக்கம் தள்ளி, இறக்கி விடப்பட்ட தாழ்வாரமும், விசாலமான திண்ணையுமாய் நாட்டு ஓடு வேய்ந்த ஒரு பழைய வீடு மட்டும் வாசல் திறந்திருந்தது.

''வாங்க... அந்த வீட்டுக்குப் போயிடலாம்'' என்று சுட்டிக் காட்டிக் கொண்டே இரட்டைத் தப்படியில் விரைந்தார், அவர். அவரைத் தொடர்ந்து ஒரு இளைஞனும், இரண்டு பெண்மணிகளும் அங்கு ஓடினார்கள்.

''மழை, நல்ல முகூர்த்தம்தான்'' என்றாள் ஓர் அம்மா.

''நல்ல முகூர்த்தம், போ. என் டிரஸ் எல்லாம் நனைந்திடுச்சு'' என்று அலுத்துக்கொண்டான் அந்த இளைஞன்.

''அந்தி மழை... எப்போது விடுமோ'' என்று ஆயாசப்பட்டாள் (இன்னொரு) அம்மா.

''அதென்னமோ... எவ்வளவு நேரம் பெய்தாலும் சரி. மழை விட்ட பிறகுதான் இந்த இடத்தை விட்டு நகர்வேன். அரைகுறை தூற்றலிலே நனைந்து கொண்டே போனால்... டிரஸ் முழுக்க நாசமாகிப் பெண் வீட்டுக்குள் நுழையும் போது பிச்சைக்காரன் மாதிரி ஆயிடுவேன்.'' ஏமாற்றமும், கேலியும் கலந்திருந்தது இளைஞனின் முகத்தில்.

அப்போது, 'வீட்டு வாசலில் பேச்சுக் குரல் கேட்கிறதே' என்று வெளியில் வந்து பார்த்தாள், ஓர் இளம் பெண். பச்சைப் பாவாடைகட்டியபதினெட்டுவயசுசெழுமை உடல் முழுக்க நாயனம் வாசித்தது.

''எதுக்கு அங்கேயே நிற்கிறீங்க. சாரல் அடிக்கும். எல்லாரும் உள்ளே வாங்க... வாங்க'' என்று அன்பொழுக வரவேற்றான், அவள்.

''பரவாயில்லே, அம்மா... இங்கேயே நிற்கிறோம். எதுக்கு உங்களுக்கு அனாவசிய சிரமம்?'' தட்டு வேஷ்டியை முழங்கால் வரை தூக்கிக் கொண்டு போலிச் சம்பிரதாயம் பேசினார், அந்த மனிதர்.

''எந்தச் சிரமமும் கிடையாது. நீங்கள் அங்கே சாரலில் நிற்பதுதான் எங்களுக்குச் சிரமமாய் இருக்கிறது.'' தோளுக்குப்பின்னால் வந்து நின்ற நரை முடியைப் பார்த்து, ''இல்லையா, அப்பா'' என்றாள், அவள்.

''ஆமாம், சார். கூச்சம் நாச்சம் பார்க்காமல் கொஞ்ச நேரம் உள்ளே வந்து உட்காருங்கள். மழை விட்டதும் போகலாம்...''

''ரொம்ப நன்றி சார்,'' நால்வரும் வீட்டுக் கூடத்தில் வந்து அமர்ந்தனர்.

''புதுசும், பட்டுமாக உங்களைப் பார்த்தால் ஏதோ... சுபகாரியத்துக்காகப் புறப்பட்ட மாதிரி இருக்கிறதே'' என்று புன்னகை செய்தார் வீட்டுக்காரர் — நரைமுடி.

''கரெக்ட். பக்கத்துத் தெருவிலே என் பையனுக்குப் பெண் பார்க்கப் போகிறோம். நன்றாய் இருந்த வானம் திடீரென்று பிடித்துக் கொண்டு விட்டது. இல்லாவிட்டால் பஸ் ஸ்டாண்டிலேயே டாக்சி பிடித்து வந்திருப்போம்...''

''நீங்கள்...''

''என் பெயர் சாரங்கன். இவன், என் மூத்தபையன் ரவி. இவனுக்குத்தான் பார்க்கப் போகிறோம். ஐ.சி.டபிள்யூ. இண்டர் முடிச்சுட்டு பிரைவேட் கம்பெனியிலே அக்கவுண்டண்டாக இருக்கிறான். இவள் என் மனைவி. அது என் அக்கா... உங்கள் பெயர்...?''

''வெங்கடேசன்... இவள் எனக்கு ஒரே பெண்.''

பெயரைக் கேட்க நாக்கைத் தூக்கினான், ரவி.

அதற்குள்—

"அப்பா... காப்பி" என்று இதமாகக் குறுக்கிட்டாள் அந்தப் பெண்.

புது டிகாக்ஷன் போலிருக்கிறது. சூடு பறக்கும் ஆவியும் சுகந்த மணமுமாக டிரேயில் கொண்டு வந்து வைத்துவிட்டு நறுவிசாக நிமிர்ந்தாள் அவள்.

பார்வையைச் சிதற விடாமல், வந்தவர்களை எந்தவித விகற்பமும் இன்றிப் பரிச்சயப் பரிவுடன் நோக்கிய விசுவாசப் பார்வையில் ஒரு கனிவும், கண்ணியமும், பணிவும் பக்குவமும் இழைந்தன.

"உங்களைக்கேட்காமலேகாப்பிகொண்டு வந்து விட்டதே. உள்ளே... அம்மா இருக்கிறார்களா?"

"மன்னிக்கவும். அவளுக்கு அம்மா இல்லை."

"ஓ... சாரி" உதட்டைக் கடித்துக் கொண்டார், சாரங்கன்.

"ஒரே பெண் என்றீர்களே தவிர பெயர் சொல்லவில்லையே" என்று மறுபடியும் ரவி ஆர்வமுடன் கேட்க முயன்றான்.

"காப்பி ஆறுகிறது. முடித்துவிட்டுப் பேசுங்கள்" என்றார், வெங்கடேசன். தொடர்ந்து அவளது அப்பா—

"எங்களுக்காக உங்கள் பெண்ணுக்கு எத்தனை சிரமம்."



லக்கேஜ் பெட்டித் தயாரிப்புத்
தலைவர்களின் படைப்பு—

# விஐபி

# கன்கார்டு

வந்திறங்குது இப்போது—

இதோ, ஜெட் யுகக் கட்டழகுள்ள புதிய விஐபி கன்கார்டு! நாகரீக நரம்போடிய அலாதி ஸ்டைலிங். கண்டறியாத வர்ண வகைகள்: பீச க்ரீம் (செவ்விள மஞ்சள்), டெஸர்ட் பிரவுன் (மணற் கபில நிறம்), மிஸ்ட் க்ரே (பனிச் சாம்பல்), க்ரீம் சாக்கலேட், மேலும் பலப் பல. உட்புறமோ இடவசதி மிகுதி.

ஓடோடிப் பார்வையிடுவீர்: அருகிலுள்ள வியாபாரியிடம்... சொகுசு லக்கேஜ் புதுவரவுகள்.

## ஆகாயமெட்டும் எங்கள் அதிநவீனக் கற்பனை.




**தேர்ந்தெடுக்க மிகப் பல வகைகள்,**
**வருங்கால யோக வரவுகளோ மேலும் பலப்பல.**

LINTAS VIP M 10 2013 TM

வெங்கடேசன் சிரித்தார். "உங்களுக்கு என்றில்லே மிஸ்டர், சாரங்கன். பிறருக்கு உதவி, ஒத்தாசை என்றால் என் பெண்ணுக்குப் பால் பாயசம் மாதிரி. பிரியத்தோடும், உற்சாகத்தோடும் ஓடி ஓடிச் செய்வாள். உதாரணமாக இப்போது நாங்கள் சினிமா தியேட்டரில் இருந்திருக்க வேண்டியவர்கள்..."

"ஏன் போகவில்லே?"

"காலேயில் ஒன்பது மணிக்குப் போய் இரண்டு மணி நேரம் வெயிலில் நின்று ஈவினிங் ஷோவுக்கு எனக்கும், அவளுக்கும் இரண்டு டிக்கெட் ரிசர்வ் பண்ணிக்கொண்டு வந்தாள். 'போகலாம்' என்று ஆயத்தமாகிக் கொண்டிருந்தோம். பக்கத்து வீட்டுக்கு இரண்டு பேர் வந்துவிட்டார்கள்..."

"அதனால் என்ன?"

"மை டியர் குட்டிச்சாத்தான் பார்ப்பதற்காகவே வந்தார்களாம். ரிசர்வேஷன் இல்லாமல் எப்படி முடியும்? அதற்காக இன்னொரு நடை அவர்களால் வரவும் முடியாது. உடனே ஓடிப் போய் எங்களுக்காக வாங்கிய இரண்டு டிக்கெட்டையும் கொடுத்து அவர்களேச் சினிமாவுக்கு அனுப்பிவிட்டாள், என் பெண்..."

'அடப்பாவி மனுஷா... பெண்... பெண் என்றே சொல்கிறாரே ஒழிய பெயரைச் சொல்ல மாட்டேனென்கிறாரே...' ரவியின் மனம் துடித்தது.

"அவர்களுக்கு டிக்கெட் கிடைத்ததில் ஏகக் குஷி. சுலோசனாவைக் கும்பிடாத குறையாய் வாழ்த்திவிட்டுப் போனார்கள்..."

'அடேங்கப்பா... ஒருவழியாய் மகளது திருநாமத்தைச் சொல்லிவிட்டார், மனுஷன். சுலோசனா. லவ்லி நேம். சுலோசனா... சுலோசனா...' கர்சீப்பால் முகத்தைத் துடைத்துக் கொண்டான், ரவி. தங்கத்தை உறைப்பது போல் அவள் பெயரை மனத்துள் உறைத்துக் கொண்டே இருந்தான்.

"ஆச்சரியமாய் இருக்கே!" புருவ மேட்டை உயர்த்திச் சிரித்தார், சாரங்கன். "கல்யாணம்?"

"இன்னும் ஆகவில்லே. பார்த்துக் கொண்டிருக்கிறேன். ம்... இந்தக் காலத்தில் கல்யாணம் என்றால் லேசா. எல்லாம் முப்பது பவுன், நாற்பது பவுன், கேட்கிறார்கள். நாங்களும் வசதியாய்த்தான் இருந்தோம். மனைவியின் நோய்க்குப் பார்த்ததில் ஆபீஸ் கடன், பாங்கு பாலன்ஸ் என்று எழுபதாயிரம் செலவாயிட்டுது."

"அடப்பாவமே."

"நானும் உங்களைப் போல் கவர்ன்மெண்ட் எம்ப்ளாயிதான். சுலோசனா பி.காம் முடிச்சுட்டு ஒரு ஆடிட் கம்பெனியிலே அப்ரண்டிசா போயிட்டிருக்கிறாள்."

"ஓஹோ..." தலையை உலுப்பினார், சாரங்கன்.

"அப்பா, 'மழை விட்டுடுச்சு. ஆனால் வழி நெடுகப் பாதாளச் சாக்கடையாகப் பள்ளம் வெட்டி, ஒரே சேறும், சகதியுமாக இருக்கும். இவர்கள் எல்லாரும் ரப்பர் செருப்பு போட்டிருக்கிறார்கள். நடந்தால் டிரஸ் முழுக்க

# வேண்டுகோள்!

என் பிதா சேங்காலிபுரம் ஸ்ரீ நாராயண தீக்ஷிதர் அவர்களுடைய ஸ்ரீமத் ராமாயணம் ஸ்ரீமத் பாகவதம் உபந்யாஸம் டேப்புகளும், என் பெரியப்பா சேங்காலிபுரம் ஸ்ரீ அனந்தராம தீக்ஷிதர் அவர்களுடைய ஸ்ரீ மகாபார்தப் ப்ரவசன டேப்பும் தேவை.

இந்த வேண்டுகோளைப் பார்க்கும் அன்பர்கள் யாரிடமாவது இந்த உபன்யாஸ டேப்புகள் இருந்தால் தயவு செய்து என்னுடன் கடிதம் மூலமோ அல்லது ஃபோன் மூலமோ தொடர்பு கொள்ள வேண்டுகிறேன். நான் கேஸட் டேப்பு வாங்கித் தருகிறேன், காப்பி எடுத்துத் தரலாம். அல்லது உபந்யாஸ டேப்புகளை எனக்கு அனுப்பிக் கொடுத்தால் நான் காப்பி எடுத்துக் கொண்டு ஜாக்கிரதையாகத் திருப்பிக் கொடுத்துவிடுகிறேன். நன்றி.

இப்படிக்கு,
சேங்காலிபுரம் டாக்டர் N. பாபு தீக்ஷிதர்,
வடகுடி 610 105 தஞ்சாவூர் ஜில்லா.
போன்: நன்னிலம் 56.

# கென்னடி ஏன் அப்படிச் செய்தார்?

அமெரிக்க அதிபராக இருந்த கென்னடி ஒரு சமயம் ஐரோப்பிய நாடுகளுக்குச் செல்ல வேண்டியிருந்தது. அப்பயணத்தின் போது, வாட்டிகன் நகருக்குச் செல்வதா.... வேண்டாமா.... என்ற சிக்கல் ஏற்பட்டுவிட்டது. காரணம், வாட்டிகன் நகருக்குச் சென்றால், கென்னடி ஒரு கத்தோலிக்கர் என்ற முறையில் போப் பாண்டவர் முன்பு மண்டியிட்டு வணங்கியாக வேண்டும். ஒரு நாட்டு அதிபர் அவ்வாறு வணங்கினால் நாடே வணங்கி அடி பணிந்ததாகும் என்று எண்ணி கென்னடி வாட்டிகன் நகருக்குச் செல்லும் எண்ணத்தைக் கைவிட்டுவிட்டார்.

தகவல்: தஞ்சை ஜா. ரவி.

ஆதாரம், நன்றி: குறளியம்.



ஸ்பிரே பண்ணி விட்டுடும். வேண்டுமானால் மெயின் ரோடுக்குப் போய் டாக்சி கொண்டு வரட்டுமா?'' என்றாள், சுலோசனா.

அந்த அக்கறையும், புத்திக் கூர்மையும் கேட்டு அத்தனை பேரும் நெகிழ்ந்து போனார்கள்.

சாரங்கன், மகனிடம் கேட்டார்: ''என்னப்பா, ரவி. டாக்சி கொண்டு வரச் சொல்லட்டுமா?''

''வேண்டாம், அப்பா.''

''பையன் ரொம்பச் சிக்கனம் போலிருக்கு'' என்றார், வெங்கடேசன்.

''இல்லை, சார். சிக்கனத்துக்காகச் சொல்லவில்லை. இனி நாங்கள் அந்த வீட்டுக்குப் போவதில் அர்த்தமே இல்லை. இப்படியே திரும்பி பஸ் ஏற வேண்டியதுதான்.''.

திகைப்பு அனைவர் முகத்திலும் நிழலாடியது.

பெரியவர்கள் 'பே' முழி முழிக்க, ரவி சொன்னான்:

''நாங்கள் பார்க்கப் போகும் இடத்தில் பெண்ணை மட்டும்தான் மேலெழுந்தவாரியாகப் பார்க்க முடியும். குணநலன்களைத் தெரிந்து கொள்ள முடியாது. ஆனால், இந்த வீட்டுக்கு வந்த கால் மணி நேரத்தில் வெங்கடேசன் சாரோட பெண்ணின் தோற்றத்தையும், குணங்களையும் தத்ரூபமாகப் பார்த்துவிட்டேன். எனக்கு... சுலோசனாவைப் பரிபூரணமாகப் பிடித்திருக்கிறது. என்ன சொல்கிறீர்கள், வெங்கடேசன் சார்!'' உறுதியான தொனியில் ரவி, அவரைத் தீர்க்கமுடன் நோக்கினான்.

''எனக்கு... எனக்கு என்ன சொல்வதென்றே புரியவில்லை. கொஞ்சம் யோசனை பண்ணிச் சொன்னால் தேவலாம்.'' திடீர் மகிழ்ச்சியினால் வெங்கடேசனின் கைவிரல்கள் வெடவெடத்தன.

''இல்லை, மிஸ்டர் வெங்கடேசன். என் பையன் எதைச் சொன்னாலும் சரியாகத்தான் சொல்வான்'' என்று புன்னகைத்தார், சாரங்கன்.

''ஆமாங்க, ஐயா. உங்கள் பெண்ணைப் பார்த்த மாத்திரத்தில் சாமி படத்துக்கு முன்னால் குத்து விளக்கைப் பொருத்தி வைச்சது மாதிரி, பளிச்சுன்னு என் மனசிலே பதிஞ்சுட்டாள். நான் நினைத்தது போல் பையனும் முடிவு பண்ணிட்டான். இதை நீங்கள் திடீர் சம்பந்தமாக நினைக்க வேண்டாம். தெய்வாதீனம் என்று நினைத்து இப்போதே முகூர்த்தம் நிச்சயம் பண்ணிடுவோம்'' என்றாள், ரவியின் அம்மா.

''நானும் அதையேதான் நினைக்கிறேன்'' என்றாள், சாரங்கனின் தமக்கை.

''அங்கே போய் அந்தப் பெண்ணைப் பிடிக்கவில்லை என்று சொல்வதற்குப் பதிலாய் அங்கே போகாமல் இருப்பது நமக்கும் நல்லது... அவங்களுக்கும் நல்லது.''

''கரெக்ட்... காட்ஸ் கிரேஸ்'' என்று வாசலில் ஒரு வாழ்த்துக் குரல் கேட்டது.

திரும்பிப் பார்த்தார்கள்.

மகாலிங்கம்.

அதாவது அவர்கள் அடுத்த தெருவில் பார்க்க இருந்த பெண்ணின் தந்தை.

''ஏதடா இன்னும் மாப்பிள்ளை வீட்டாரைக் காணுமே என்று புலம்பிக் கொண்டிருந்தேன். இவர்களுடன் பஸ்ஸில் வந்த பக்கத்து வீட்டுக்காரர் இங்கே ஒண்டிக் கொண்டதாகத் தகவல் சொன்னார். மழை விட்டதும் ஓடி வந்தேன். நீங்கள் பேசியதெல்லாம் வாசலில் நின்று கேட்டேன். என்னதான் மனிதர்கள் பிரயத்தனப்பட்டாலும், பிராப்தம் எதுவோ அதுதான் நடக்கும். அதனாலே உங்கள் முடிவு எனக்கும் பரம சந்தோஷம். ஜாம்... ஜாமென்று கல்யாணத்தை நடத்துங்கள், மிஸ்டர் வெங்கடேசன்'' என்று பாராட்டிய மகாலிங்கம் ''எங்கே உங்க மகளைக் காணோம்?'' என்று தேடினார்.

''இங்கே இருக்கிறேன், அங்கிள்'' என்று அறைக்குள் இருந்து வெட்கத்துடன் எட்டிப் பார்த்தாள், சுலோசனா.

# சித்தரஞ்சனி

## சாண்டில்யன்

**சென்ற வாரம்**

கோதாவரி நதி தீரத்திலிருந்த சாதவாகன அரசின் தலைநகர் பிரதிஷ்டானம். அரண்மனை மேல் உப்பரிகையில் ராஜமாதா பாலஸ்ரீ சாதவாகனர்களின் மூதாதையான சிமுகன் காலத்துப் பேரரசையும் இன்று சுருங்கிக் கிடக்கும் சிறிய அரசையும் ஒப்பிட்டுப் பார்த்து வருந்துகிறாள்.

சாகர்களிடம் சிக்கிவிட்ட முக்கால்வாசி ராஜ்யத்தை யார், எப்படி மீட்பது? என்று அவள் யோசிக்கையில், உயரமும் ஆகிருதியுமாய், இடையில் கட்டாரியுடனும், முகத்தில் பிரும்மதேஜசுடனும் மகன் கௌதமிபுத்ர சத கரணி எதிர்ப்படுகிறான். மூதாதையர்களின் க்ஷத்திரிய வீரமும், அந்தண அறிவாற்றலும் ஒருங்கே பெற்றிருக்கும் தன் மகனால் தன் ஆசை நிறைவேறும் என்று எண்ணுகிறாள் ராஜமாதா. கௌதமிபுத்ரனும் வெகு சீக்கிரம் சாகர்களையும், யவனர்களையும், பஹ்லவர்களையும் முறியடித்து சாதவாகனப் பிரதேசங்களை மீட்கத் திட்டமிட்டிருப்பதாகக் கூறுகிறான்.

படையெடுப்புக்கு முன் தாபிலேஸ்வர் துறைமுகத்திற்குச் சென்று அங்குள்ள பாதாளக் கோயிலில் சண்டிகா தேவியையும், மலை மீதுள்ள கோயிலில் தாபிலேசுவரரையும் வழிபடச் சொல்கிறாள் ராஜமாதா.

அன்றே வழிபாட்டுக்குப் புறப்படத் தீர்மானிக்கும் கௌதமிபுத்ரனுக்கு மலைக்காட்டில் உலாவும் மோகினிப் பிசாசைக் குறித்து எச்சரிக்கிறாள் பாலஸ்ரீ. அர்த்த ஜாமத்தில் பாடும் அந்தப் பிசாசின் பெயர் சித்தரஞ்சனி, என்கிறாள்.

அந்தப் பிசாசு அழகாகவும், பாடுவதாகவும் இருந்தால் அதைப் பிடித்து வருவதாக நகைப்புடன் சொல்லிப் புறப்படுகிறான் கௌதமிபுத்ரன்.

இரண்டே நாட்களில் அவன் நகைப்பு மறைகிறது. அந்தப் பாடும் பாவையைப் பார்க்கவும் கேட்கவும் செய்கிறான் அவன்...!

## 2. வளர்ந்து வந்த மேகங்கள்

சித்தரஞ்சனி என்ற மோகினிப் பிசாசைப் பற்றியும் அது அடிக்கடி வெளியே தோன்றிப் பூமிக்குள் மறைந்து விடுவதைப் பற்றியும்



தாய் கூறியதைச் சித்தத்தில் உன்னி உள்ளூரச் சிரித்தபடியே தாபோல் துறைமுகத்தை நோக்கிப் பயணத்தைப் பிரதிஷ்டானவிலிருந்து துவங்கிய கௌதமிபுத்ர சதகர்ணி, இரண்டு நாட்கள் இடைவிடாமல் இரவும் பகலும் பயணம் செய்து மூன்றாவது நாள் காலையில் தாபோல் துறைமுகத்துக்குச் சற்று முன்பிருந்த மலைக்காட்டுக் குடிசைக் கூட்டமொன்றுக்கு வந்து சேர்ந்த போது, தாபோல் மலையை நெருங்க நெருங்க ஊர்களில் ஜன நடமாட்டம் குறைந்து வந்ததையும் கடைசியாகத் தோன்றிய குடிசைக் கூட்டத்தில் குடிசைகள் அதிகமிருந்தாலும் குடிசைகள் யாருமில்லாமல் வெறித்துக் கிடந்ததையும் கவனித்து அந்த நிலைமைக்குக் காரணம் எதுவாயிருக்கும் என்று உள்ளூர வினாவொன்றையும் எழுப்பிக் கொண்டு, புரவியை மலைச் சரிவிலேயே சிறிது நிறுத்தி அந்தக் குடிசை கூட்டத்தின் மீது தனது ஆராய்ச்சிக் கண்களை ஓடவிட்டான். அங்கிருந்த குடிசைக் கூட்டத்தில் அரவம் ஏதுமில்லாததையும், தனது புரவியின் குளம்படிகளைக் கேட்டதால் சற்று



எட்ட இருந்த இரண்டு குடிசைகளிலிருந்து இரண்டு பூனைகளும், சில நரிகளும் வெளியே ஓடியதையும் கண்டான். காட்டு மரங்களிலிருந்து பறவைகள் சிலவும் சிறகடித்து மேலே பறந்ததையும் ஆனால் மனிதர் யாரும் தலை காட்டாததையும் கவனித்து, சிறிதுநேரம் நின்ற கௌதமிபுத்ரன் அந்தக் குடிசைகளில் சற்றுப் பெரிதாயிருந்த குடிசையை நோக்கிப் புரவியைச் செலுத்தி "யாரங்கே?" என்று இரைந்து குரல் கொடுத்தான்.

அவன் குரல்மலையில்எதிரொலிசெய்ததேயொழிய யாரும் நீண்டநேரம் பதில் கொடுக்காததால் புரவியை எதிரே தெரிந்த மலையை நோக்கித் திருப்ப முயன்ற சமயத்தில் குடிசை வாயிலைத் திறந்து வந்த ஒரு வயோதிகன் "யார் வேண்டும் உனக்கு?" என்று கௌதமிபுத்ரனை நோக்கி வினாவொன்றை வீசினான். அந்த வினாவில் வரவேற்பில்லை, மகிழ்ச்சியில்லை, வெறுப்பும் வருத்தமும் கலந்து கிடந்தன.

கௌதமி புத்ரன் தனது புரவியில் இருந்த வண்ணமே திரும்பி அவனை நோக்கி "நீண்டதூரத்திலிருந்துவருகிறேன். *தாப்யாவுக்குப் போகப் பாதை எது என்று தெரிய வேண்டும்" என்றுமெதுவாகப் பதில்சொன்னான்.

வயோதிகன் முகத்தில் வருத்தத்தின் சாயை பூர்ணமாகப் படர்ந்ததாலும், புருவங்கள் மேலே ஏறியதாலும், அவன் நெற்றியில் தீட்டியிருந்த சந்தனக் கோடுகள் சிறிது சுருங்கின. "அங்கு நீ எதற்காகப் போக வேண்டும்?" என்று வினவினான் அந்தவயோதிகன் வருத்தம் குரலிலும் ஒலிக்க.

"தாபிலேசுவரரைத் தரிசிக்க வந்திருக்கிறேன்" என்று கூறிய கௌதமிபுத்ரன் புரவியிலிருந்து கீழே இறங்கினான்.

அவனை ஏற இறங்கப் பார்த்த அந்த வயோதிகன் தனது மீசை தாடிகளையும் சடைபோட்டுத் தொங்கிய தலைக் குழலையும் ஒருமுறை தடவி விட்டுக் கொண்டு "தாபிலேசுவரரை எதற்காகத் தரிசிக்க வேண்டும்?" என்று வினவினான் வெறுப்பு துலங்கிய குரலில்.

"ஆண்டவனைத்தரிசிக்கக்காரணம் வேண்டுமா?" கௌதமிபுத்ரன் வியப்புடன் வினவினான்.

"ஆம், இப்பொழுதுவேண்டும். தாபிலேசுவரரை நம்பியிருந்த இந்த மலைக்குடிசைகளில் இருந்தவர் ஓடிவிட்டார்கள். சென்ற ஆறு மாதங்களாகச் சுற்றுப்புறக் கிராமங்களில் யாரும் கிடையாது" என்றான் வயோதிகன்.

கௌதமிபுத்ரன் மேலும் பேச்சுக் கொடுத்து, "தாபிலேசுவரருக்குப் பிரசாதம்?" என்று கேட்டான்.

"உச்சி காலத்தில் மட்டும் நான் சென்று அபிஷேகம் செய்துவிட்டுச் சிறிது பிரசாதம் சமர்ப்பித்துவிட்டு வருகிறேன். அதை நான் சாப்பிட்டுக் காலம் கழிக்கிறேன்."

"எல்லோரும் ஓடிவிட்ட பிறகு நீர்மட்டும் ஏன் இங்கு தங்கியிருக்கிறீர்?"

"நான் தாபிலேசுவரர் ஆலயத்தின் பரம்பரை பூஜாரி. எனது தந்தை கோயிலை என் கழுத்தில் கட்டிவிட்டார். கோயிலைவிட்டு ஓட மனம் வரவில்லை. தவிர வாழ்க்கையிலும் எனக்கு ஆசையில்லை. அந்தப் பிசாசு அடித்துப் போட்டாலும் போடட்டும் என்றிருக்கிறேன். அந்தச் சனியன் பிடித்த பிசாசு என்னை அடிக்க மறுக்கிறது."

"பிசாசா!" என்று எதுமறியாததைப் போல் கேட்டான் கௌதமிபுத்ரன்.

வயோதிகன் முகத்தில் வியப்பு தோன்றியது. "அதைப் பற்றி உனக்கு எதுவுமே தெரியாதா?" என்று விசாரித்தான் வயோதிகன் வியப்பு குரலிலும் துலங்க.

"தெரியாது." இதை சர்வசாதாரணமாய்ச் சொன்னான் கௌதமிபுத்ரன்.

"தாப்யா மலையில் ஒரு மோகினிப் பிசாசு உலாவுகிறது. நள்ளிரவில்பாடுகிறது. அந்தப் பாட்டைக் கேட்டவர் சித்தம் மயங்கிவிடுகிறது. அப்படியே சுரணையற்று விழுந்துவிடுகிறார்கள். இரண்டொருவரை நான் எடுத்து வந்து சிகிச்சை செய்திருக்கிறேன். சிலர் என்ன ஆனார்களென்று தெரியவில்லை. அந்த மலைக்காட்டுக்குள் நுழைந்தவர்கள் மறைந்துவிட்டார்கள், திரும்பவில்லை" என்று சொன்ன வயோதிகன் "நீ அவசியம் தாபிலேசுவரரைத் தரிசிக்கத்தான் வேண்டுமா?" என்று வினவினான்

"ஆம்."

"அப்படியானால் இங்கே பக்கத்தில் அருவியிருக்கிறது. அதில் நீராடி விட்டு வா. உச்சிக் காலத்தில் போவோம்."

"நான் இப்பொழுதே போகிறேன். உச்சிக் காலத்தில் உங்களைக் கோயிலில் சந்திக்கிறேன்" என்ற கௌதமிபுத்ரன் தனது புரவியில் ஏறச் சென்றவனை வயோதிகன் தடுத்து, "மகனே! நீ சிறியவன். இளங்கன்று பயமறியாது என்ற மூதுரைக்கு நீ சிறந்த சான்று. ஆனால் தனியாகப் போவது உசிதமல்ல" என்றார்.

ஆனால் அச்சமென்பதை அறவே அறியாத கௌதமிபுத்ரன் "பூஜ்யரே! தங்களை நான் தாபிலேசுவரர் சந்நிதியில் சந்திக்கிறேன்" என்று கூறிவிட்டுப் புரவி மீது தாவி அதைத் தாபோல் மலைக்காட்டுப் பாதையில் நடத்தினான். சற்றுத் தூரத்திற்கெல்லாம் கண்ணுக்குத் தெரிந்த தாபோல் துறைமுகம் கண்ணைப் பறிக்கும் அழகுடன் விளங்கியது.

ஸஹ்யாத்ரி மலைத்தொடரின் ஒரு பகுதியும், நைமிசாரண்யம் போல் கடவுளே காடாக அமைத்துவிட்டதாக ஐதிகமுள்ள அந்தத் தாபோல் துறைமுகக்காடு மிக அடர்த்தியாயிருந்ததன்றிப் பெரும் மரங்களுடனும் புஷ்பச் செடிகொடிகளால் நிரம்பியதாகவும் காணப்பட்டதால் சில இடங்களில் புரவி மீது படுத்த வண்ணமே புஷ்பச் செடிகள் உடலில் உராயப் பயணம் செய்த கௌதமிபுத்ரன் மலைச்சரிவில் ஒதுக்குப்புறமாயிருந்த தாபிலேசுவரரின் சிறு கோவிலைக் கண்டான். அந்தக் கோவிலின் சிறு முகப்பு மண்டபத் தூண் ஒன்றில் புரவியைக் கட்டிவிட்டுச் சுற்றுமுற்றும் கண்களை ஓடவிட்டான்

* தாபிலாவதி என்ற புராணப் பெயரிலிருந்து மருவி வந்தது தாபோல் அல்லது தாப்யா.

உயர்ந்து வானளாவிய மலைகளுக்கிடையில் வாசிஷ்டி நதியென்றும் தெற்குப்புறத்திலிருந்த அஞ்சன்வேல் கோட்டையின் காரணமாக அஞ்சன்வேல் நதியென்றும் வரலாற்றுப் பிரசித்தி பெற்ற புண்ய நதியின் வடக்குப் பகுதியிலிருந்த துறைமுகத்தின் மீது தாக்கிய கடலலைகள் காலை வெயிலில் வெள்ளிப் பாளங்களைப் போல் காட்சியளித்தன. வாசிஷ்டி நதியும் பச்சிமக் கடலில் (அரபிக் கடலில்) வேகமாகப் பாய்ந்து கலந்த காட்சி, யுவதியொருத்தி காதலனை அணுகும் ஆத்திரத்தைப் புலப்படுத்தியது. அந்த நதி மலைச்சரிவிலிருந்து உதிர்ந்த புஷ்பங்களைத் தனது நீரில் சுழலவிட்டு மலர்க்கிரீடங்களைச் சமைத்துக் கொண்டது தனி அழகை அந்த ஆற்றுக்கு ஏற்படுத்தியது. தவிர தாபோல் மலைக்காட்டிலிருந்த விருட்சங்கள் லேசாகக் காற்றில் அசைந்ததால் வண்ண மலர்களும் காய்ந்த சருகுகளும் சேர்ந்து விழுந்து வாழ்க்கை புஷ்பிப்பதோடு காயவும் செய்யும் என்ற தத்துவத்தை விளக்கின. இந்த அழகையெல்லாம் நீண்ட நேரம் பார்த்துக் கொண்டு நின்ற கௌதமிபுத்ரன் மலைச் சரிவில் இறங்கிச் சென்று வாசிஷ்டி நதியில் நீராடிப் புரவியில் தொங்க விட்டிருந்த மான் தோல் பையிலிருந்து புத்துடை அணிந்து பையில் எப்பொழுதுமிருந்த சந்தனத்தையும் நெற்றியில் தீட்டிக் கொண்டான். பிறகு நதியில் மீண்டுமொரு முறை இறங்கிக் காலைக் கடனை முடித்துக் கொண்டு கோயிலுக்கு வந்து பத்மாசனம் போட்டுக் கொண்டு பிராணாயாமம் செய்தான். அவன் அனுஷ்டானங்கள் முடிவதற்கும் உச்சிகாலம் வருவதற்கும் நேரம் சரியாயிருந்ததால் வயோதிக பூஜாரியும் கோயிலுக்கு வந்து சேர்ந்தார். கோயிலுக்குக் கதவு ஏதுமில்லாதிருந்ததால் அவர் நேராக உள்ளே சென்று அங்கிருந்த செப்புக் குடமொன்றை எடுத்துவந்து ஆற்றிலிருந்து நீர் மொண்டு வந்து சுவாமிக்கு அபிஷேகம் செய்தார். பிறகு தான் கொண்டு வந்த மூட்டையிலிருந்த பிரசாதத்தைச் சுவாமிக்குநிவேதனம்செய்தார். அதைக்கௌதமி புத்ரனுக்கும் கொடுத்துத் தாமும் உண்டு விட்டுக் குடத்தில் மீதியிருந்த நீரை அந்த வாலிபனுக்கும் கொடுத்துத் தாமும் அருந்தினார். பிறகு மிகுந்த களைப்பினால் அப்படியே கோயில் வாயிலில் படுத்தார். "குழந்தாய்! இன்னும் நான்கு நாழிகைகள் நாம் இங்கு இருக்கலாம். பிறகு புறப்படுவோம்" என்று சொன்னார்.

"எங்கு சுவாமி?" என்று பயபக்தியுடன் கேட்டான் வாலிபன்.

"எனது குடிசைக்கு." இதைத் திட்டமாகச் சொன்னார் பூஜாரி.

"நான் வரவில்லை" என்று பணிவுடன் கூறினான் கௌதமிபுத்ரன்.

"ஏன்?"

"ஒருநள்ளிரவுசந்நிதியில்படுக்க வேண்டுமென்று எனது தாய் சொல்லியிருக்கிறாள்."

"இரவு இங்கு படுக்க வேண்டுமா?"

"ஆம். அப்படித்தான் பிரார்த்தனை."

"அந்தப் பிரார்த்தனையை விட்டுவிடு."

"பிரார்த்தனையை எப்படி விட முடியும்?"

"ஒன்று பிரார்த்தனையை விட வேண்டும், அல்லது பிராணனை விட வேண்டும். எதைச் செய்யப் போகிறாய்?"

"சுவாமி! நான் என்றும் உயிருக்குப் பயந்தது கிடையாது. தவிர பிரார்த்தனை இத்துடன் முடியவில்லை."

"வேறு என்ன பிரார்த்தனையோ?"

"சண்டிகாதேவியைத் தரிசிக்க வேண்டும்."

இதைக் கேட்டதும் படுத்திருந்த பூஜாரி சரேலென எழுந்திருந்து அவனை நோக்கினார். "உனக்குப் பைத்தியம் ஏதுமில்லையே?" என்றார்.

"இல்லை, ஏன்?" என்று வினவினான் கௌதமிபுத்ரன்.

"சண்டிகாதேவி ஆலயம் பாதாளத்திலிருக்கிறது" என்றார் பூஜாரி.

"இருந்தாலென்ன?"

"அதைச் சித்தரஞ்சனியும் தரிசிக்கிறாள் ஒவ்வொரு நாளும் நள்ளிரவில்."

"மோகினியா?"

"ஆம்."

"மோகினியை நான் பார்க்கிறேனே."

"பார்க்கலாம். பிழைக்க மாட்டாய்" என்று எச்சரித்தார் பூஜாரி.

"ஏன் பிழைக்கமாட்டேன்? என்னை என்ன செய்துவிடும் மோகினிப் பிசாசு?" என்று கேட்டான் கௌதமிபுத்ரன் புன்முறுவலுடன்.

"உன்னை முறித்துப் போட்டுவிடும்" என்றார் பூஜாரி.

அவர் அச்சுறுத்த அச்சுறுத்த அந்தப் பிசாசைப் பார்த்துவிடுவது என்ற தீர்மானம் செய்து கொண்டான் சாதவாகன வாலிபன். அவன் பிடிவாதத்தைப் பார்த்த பூஜாரி தனது மடியிலிருந்து விபூதியை எடுத்துக் கொடுத்து, "உன்னைத் தாபிலேசுவரன் காக்கட்டும்" என்றுகூறிச்சென்றார். போகும் போது உன்னைச் சொல்லிக் கொண்டார்: "நானே உனது சடலத்தை எடுத்துச் செல்ல வருகிறேன்" என்று. மாலை மெள்ள மெள்ள முற்றியது. மலையும் கடலும் நதியும் இணைந்த மாலைநேரக் காட்சி மனோகரமாயிருந்தது. அதைப் பார்த்துப் பரவசப்பட்டான் அந்த வாலிபன். "நள்ளிரவு வரட்டும். அந்த மோகினியைப் பார்க்கிறேன்" என்று உற்சாகத்துடன் காலத்தை ஓட்டினான் அவன். இரவும் முற்றியது. கடல் அலைகள் மீது மேகங்கள் வளர்ந்து வந்து விண்ணை நோக்கிச் சென்றன.

(தொடரும்)

மூடன் பிறரைக் குறை கூறுவான், அரைகுறை அறிவாளி தன்னையே குறை கூறிக் கொள்வான், அறிவு முற்றியவன் தன்னையும் குறை கூற மாட்டான், பிறரையும் குறை கூற மாட்டான்.

— ஹெர்டர் — அருள் மணி



* சமுதாயமாவது மண்ணாங்கட்டியாவது?

# "நான் ஒ

கதை, திரைக்கதை, வசனம், பாடல்கள், இசை... என்று ஒரு சினிமா யூனிட்டையே தன்னுள் அடக்கிக் கொண்டு, அரசியல்ரீதியாக(வும்) தான் தி. மு. க. தான் என்று வெளிப்படையாகப் பிரகடனப்படுத்திக் கொண்டிருப்பவர் டி. ராஜேந்தர். அவரை எஸ். லட்சுமி, எல். என். சுதா, எஸ். ஆர். ஜி. பதி, எஸ். அமர் பாட்சா ஆகியோர் சந்தித்து ஒரு கலந்துரையாடல் நடத்தினார்கள். அவர்களுடன் கல்கி பத்திரிகையும் கலந்து கொண்டது. அந்தக் கலந்துரையாடலின் தொகுப்பைத்தான் இங்கே தந்திருக்கிறோம்.

கல்கி: சினிமா என்பது மிகவும் பொறுப்பு வாய்ந்த மீடியம் — சக்தி வாய்ந்த ஆயுதம். அப்படிப்பட்ட ஒன்றைக் கையில் வைத்திருக்கும் நீங்கள் சமுதாயப் பொறுப்புணர்ச்சியோடுதான் செயல்படுகிறீர்களா? இந்தச் சமுதாயத்தைப் பற்றி உங்களுடைய பார்வை என்ன? சினிமாவுக்கென்று என்ன வரையறை வைத்திருக்கிறீர்கள்? சொல்லுங்கள் ராஜேந்தர்...

டி. ராஜேந்தர்: சினிமாவில் உள்ளவர்களுக்குச் 'சம்பாதிக்க வேண்டும்' என்ற எண்ணத்தைத் தவிர வேறு எந்தப் பொறுப்பும் இருப்பதாக நான் சொல்லமாட்டேன். சமுதாயமாவது மண்ணாங்கட்டியாவது? எல்லாம் காசுதான்! இப்படி நான் சொல்வதற்காக மற்றவர்கள் என் மீது எகிறிக் குதித்தாலும் அது பற்றி எனக்குக் கவலை இல்லை! •

லட்சுமி: உங்களுடைய பார்வையைத்தான் கேட்கிறோம்.

டி. ரா.: இன்றைய சினிமா உலகில் என்னுடைய கொள்கைகளை — எண்ணங்களைப் புகுத்த முடியவில்லை என்பதும் உண்மையே.

அமர் பாட்சா: உங்களுடைய கொள்கைகள் — எண்ணங்கள் தான் என்ன?

டி. ரா.: தாலி கட்டிய புருஷனுக்குச் சமைத்துப் போட வேண்டும் என்று நினைக்கிற பெண்களைவிட காலைக் காட்சி சினிமா பார்க்க வேண்டும் என்று நினைக்கும் பெண்கள்தான் அதிகம். கல்லூரிக்குமட்டம்போட்டுவிட்டு சினிமா பார்க்கும் மாணவர்கள்தான் அதிகம். கூலி வேலை செய்பவன் கூட இரவு எந்த சினிமாவுக்குப் போகலாம் என்றுதான் எண்ணுகிறான். இப்படி அனைவரையும் கவர்ந்து கொண்டிருக்கும் சினிமாவில் புகுந்து நானும் எனது கருத்துக்களைச் சொல்ல வேண்டும் என்ற எண்ணத்தோடுதான் மாயவரத்திலிருந்து சென்னைக்கு வந்தேன்.

கல்கி: அதுதான், என்ன கருத்துக்களோடு வந்தீர்கள்?

டி. ரா.: எடுத்தவுடனேயே ஒரு சினிமாவை எடுத்து அதில் எனது கருத்துக்களைச் சொல்லிவிட முடியும் — இந்தச் சமுதாயத்தை மாற்றிவிட முடியும் என்று நான் நம்பவில்லை. அது ஒரே நாளில் சாதித்து விடக் கூடிய விஷயமும் இல்லை. இருந்தாலும் முன்பிருந்த சினிமா பார்முலாவை உடைத்து விட்டு வித்தியாசமான முறையில் எடுக்க வேண்டும் என்பதில் நான் ஆரம்பத்திலிருந்தே கவனமாக இருக்கிறேன்.

சுதா: வித்தியாசம் என்றால்... எது மாதிரி?

டி. ரா.: நிஜ வாழ்க்கையில் எந்தக் காதலனும், காதலியும் பின்னணி இசை முழங்க டூயட் பாடிக் கொண்டு காதலிக்கிறார்கள்? ஆனால் சினிமா காதலர்கள் காதலிக்கிறார்கள். இது அபத்தமில்லையா? பார்ப்பவர்களின் காதில் பூ சுற்றுகிற வேலையில்லையா?

எஸ். ஆர். ஜி. பதி: மனிதனுக்கு எத்தனையோ ஆசைகள். நிஜ வாழ்க்கையில் இல்லாத ஒன்றை — செயல்படுத்த முடியாத ஒன்றை — சினிமாவில் பார்க்கும் போது மகிழ்ச்சியடைகிறான். அதுபோல்தானே டூயட்டுகள்!

டி. ரா.: அதையொரு மிகப் பெரிய குற்றச்

# ...கம்யூனிஸ்ட்!"

## —டி.ராஜேந்தர்

சாட்டாக நான் சொல்லவில்லை. ஆனாலும் அது மக்களை முட்டாளாக்குகிற ஒரு விஷயம் தானே! எந்த சினிமாவிலாவது ஹீரோ அடி வாங்கியதாகச் சரித்திரம் உண்டா? ஹீரோ அடி வாங்க வேண்டும் ஸார்! ஹீரோவை வில்லன் புரட்டிப் புரட்டி எடுக்க வேண்டும்! சினிமாவில் மிகச் சுலபமாக "ராதா ஐ லவ் யூ!" என்று சொல்லி விடுகிறார்கள். ஆனால் நடைமுறை வாழ்க்கையில் அப்படிச் சொல்லிவிட முடியுமா? அப்படிச் சொல்வது எத்தனை கஷ்டம் தெரியுமா? அதைத்தான் நான் ஒருதலைராகத்தில்சொன்னேன். பழைய பார்முலாவை உடைத்தேன்.

லட்சுமி: உங்கள் படங்களில் காதலைத் தவிர வேறு என்ன இருக்கிறது?

டி. ரா.: அனைவருக்கும் 'காதல்' என்ற விஷயம் ஆழ்மனத்தில் வேரூன்றிக் கிடக்கிறது. ஆகவேதான் அப்படிப்பட்ட படங்களை ரசிக்கிறார்கள். அதேபோல்தான் அண்ணன், தங்கை பாசமும். அதுபற்றிப் படமெடுத்தாலும் ரசித்துப் பார்க்கிறார்கள். அதைப் புரிந்து கொண்டுதான் நானும் கமர்சியலாகப் படங்களை, எடுத்துக் கொண்டிருக்கிறேன். ஆனாலும் என் ஆத்ம திருப்திக்காக இதுவரை எந்தப் படமும் எடுக்கவில்லை. அப்படி ஏன்? என் ஆத்ம திருப்திக்காக ஒரு ப்ரேம் கூட எடுக்கவில்லை என்பதுதான் உண்மை.

லட்சுமி: உங்கள் ஆத்ம திருப்திக்காக எப்போதுதான் படமெடுக்கப் போகிறீர்கள்?

டி. ரா.: எந்தத் தயாரிப்பாளராவது பத்து லட்ச ரூபாய் தரத் தயாராக இருந்தால் — என் இஷ்டப்படி படமெடுக்கச் சம்மதித்தால் எடுப்பேன். தேசிய அளவில் அவார்ட் வாங்குவேன். அதற்காக எனக்குப் பணமே வேண்டாம். அந்தப் படம் முடியும் வரை மாதச் சம்பளமாக எனக்கு இரண்டாயிரம் ரூபாய் கொடுத்தால் போதும்.

பதி: ஏன், நீங்களே முதலீடு செய்து அப்படியொரு படத்தை எடுத்தால் என்ன?

டி. ரா.: என்னிடம் அவ்வளவு பணம் இல்லையே! அதைச் சம்பாதிக்கத்தான் இப்போது பாடுபட்டுக் கொண்டிருக்கிறேன்

சுதா: அந்தப் படம் எப்படிப்பட்டதாக இருக்கும்? அதற்காகக் கதையெல்லாம் தயாராகி விட்டதா?

டி. ரா.: 'பாஸ்' 'இந்தக் கொள்ளைக் கூட்டத்தை ஒழிக்காமல் விட மாட்டேன்' என்று உறுமுகிற நாயகனை அதில் நீங்கள் பார்க்க முடியாது. உதாரணமாக மது குடிப்பதால் ஏற்படும் தீமைகளைப் பற்றிக் கூடப் படமாக எடுக்கலாம். அவார்டு வாங்கலாம்.

அமர்: அதுமாதிரியான படங்களை ஐந்து லட்சம், பத்து லட்சம் என்று முதலீடு செய்யாமலேயே குறைந்த செலவில் எடுக்கலாமே?

டி. ரா.: அதற்கும் பணம் வேண்டாமா? அது கூட என்னிடம் இல்லை. இப்போது தான் பொருளாதார விஷயத்தில் சிறிது சிறிதாக முன்னேறிக் கொண்டிருக்கிறேன்.

பதி: முத்தக் காட்சிகளை அனுமதிக்கலாமா?

டி. ரா.: அதுபற்றியெல்லாம் எனக்குக்

• That is the guts of T. Rajender!

கவலையில்லை. எப்படியோ எடுத்துக்கொண்டு போகட்டும். ஏனெனில் இப்போது காண்பிக்கப்படும் சில காட்சிகளை விட முத்தக் காட்சிகள் எவ்வளவோ பரவாயில்லை என்றுதான் சொல்வேன்.

கல்கி: சரி, ராஜேந்தர்! மாயவரத்திலிருந்து சென்னைக்கு வரும்போது உங்களுக்கென்று சில கொள்கைகளைக் கொண்டு வந்ததாகச் சொன்னீர்களே, அந்தக் கொள்கைகள் என்ன?

டி.ரா.: இந்திய நாட்டில் மதம் — ஜாதி — பொருளாதாரம் ஆகியவற்றின் அடிப்படைகளில்தான் மக்கள் பிரித்து வைக்கப்பட்டிருக்கிறார்கள். அதில் முக்கியமானது பொருளாதாரம். பணமிருப்பவனால்தான் டாக்டர், எஞ்சினியர் என்று படிக்க முடிகிறது. இல்லாதவனால் என்ன முடிகிறது? முதலில் இந்தப் பொருளாதார பேதங்களை அடியோடு ஒழித்தாக வேண்டும். அதுதான் எனது கொள்கை.

சுதா: இப்படி மக்கள் பிரித்து வைக்கப்பட்டிருப்பதற்கு யார்தான் காரணம்?

டி.ரா.: அறியாமைதான் — மக்களுடைய அறியாமையேதான்!

பதி: இந்த அறியாமையும் தொடர்ந்து கொண்டேதானே இருக்கிறது. அதற்கு யார் காரணம்?

டி.ரா.: அடிப்படைக் கோளாறு நமது கல்வி முறைதான். அடுத்தது நமது அரசியல்வாதிகள். மக்கள் சிந்தித்துவிடக் கூடாது என்பதில் அரசியல்வாதிகள் மிகவும் தெளிவாக இருக்கிறார்கள். ஏனெனில் மக்கள் சிந்திக்க ஆரம்பித்து விட்டால் அவர்களுக்கு ஓட்டு விழாதே!

லட்சுமி: நீங்கள் சார்ந்திருக்கும் தி.மு.க. வையும் சேர்த்துத்தான் சொல்கிறீர்களா?

டி.ரா.: நான் பொதுப்படையாக எல்லா அரசியல் கட்சிகளையும் — அரசியல்வாதிகளையும் சேர்த்துத்தான் சொல்கிறேன்.

அமர்: உங்களுடைய அரசியல் பார்வைதான் என்ன?

டி.ரா.: பாமர மக்கள் இங்கு ஏமாற்றப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். அவர்களை ஏமாற்றும் வித்தையில் நமது அரசியல்வாதிகள் வல்லவர்களாக இருக்கிறார்கள். முதலில் இந்த நிலையை மாற்ற வேண்டும். பாமர மக்களுக்குச் சிந்திக்கத் தூண்டும் கல்வியைக் கொடுத்தாக வேண்டும்.

கல்கி: இதற்கெல்லாம் நீங்கள் சார்ந்திருக்கும் தி.மு.க. வால் தீர்வு கண்டுவிட முடியும் என்று நம்புகிறீர்களா, ராஜேந்தர்?

டி.ரா.: அடிப்படையில் நான் ஒரு கம்யூனிஸ்ட். சிறு வயதில் கஷ்டப்பட்ட யாரும் கம்யூனிஸ்டாகத்தான் இருக்க முடியும். நான் பள்ளிக்கூடத்திற்குச் செல்லும்போது எனது நிஜாரில் கிழிந்திருக்கும் பின்பக்கங்களை என் தாயார் தைத்து அனுப்புவார். அப்படிப்பட்ட வறுமையில்தான் நான் படித்தேன். ஆனாலும் நான் நன்றாகப் படித்தேன். நன்றாகப் படிக்காத பணக்கார மாணவர்கள் மட்டும் டெரிகாட் நிஜார் போடுகிறார்களே, எப்படி என்று யோசித்தேன். புத்தியுள்ளவர்களிடம் பணம் இல்லாமல் இருப்பதற்கு என்ன காரணம் என்று சிந்தித்தேன். அதன் மூலம்தான் எனக்கு கம்யூனிஸத்தில் ஈடுபாடு வந்தது.



கல்கி: அப்படியானால் நீங்கள் கம்யூனிஸ்ட் கட்சியில் அல்லவா சேர்ந்திருக்க வேண்டும்? தி.மு.க. வில் ஏன் சேர்ந்தீர்கள்?

டி.ரா.: அடிப்படையில் நான் ஒரு கம்யூனிஸ்ட்தான் என்றாலும் எனக்கு இந்திய கம்யூனிஸ்ட்டுகளிடம் முழு நம்பிக்கை வரவில்லை. அதனால்தான் நான் தி.மு.க. வில் சேர்ந்தேன்.

லட்சுமி: கம்யூனிஸ்ட் கொள்கைகளும், தி.மு.க. கொள்கைகளும் ஒன்றா என்ன?

டி.ரா.: கலைஞரும் கம்யூனிஸத்தை விரும்புபவர் — ஆதரிப்பவர். அது ஒன்று போதாதா?

கல்கி: உண்மையாகவா, ராஜேந்தர்?

டி.ரா.: ஆம். கம்யூனிஸத்தின் சிவப்பை முழுமையாகச் சொன்னால் எங்கே மக்கள் ஏற்றுக் கொள்ள மாட்டார்களோ என்ற சந்தேகத்தினால்தான் — கம்யூனிஸத்தின்மேல் மக்களுக்குள்ள அலர்ஜியால்தான் தி.மு.க. கொடியில் பாதியைக் கறுப்பாக வைத்திருக்கிறார்கள்!

கல்கி: சரி, பழையபடி மக்களின் அறியாமைக்கு வருவோம். நீங்களும் அந்த அறியாமையைப் பயன்படுத்தித்தானே, படமெடுக்கிறீர்கள்? காசு சம்பாதிக்கிறீர்கள்?

டி.ரா.: நான் இந்த அறியாமையைப் பயன்படுத்தி வளருவது, ஒரேயடியாக இந்த அறியாமையை உடைத்தெறிவதற்காகத்தான். ஒரு பலூனில் ஓவியம் தீட்டி, பலூனில் காற்றை நிரப்ப நிரப்ப பலூன் மட்டும் பெரிதாவதில்லை. அந்த ஓவியமும் பெரிதாகிக் கொண்டேதான் வருகிறது. கடைசியில் அந்த பலூன் வெடித்துச் சிதறும்போது அந்த ஓவியமும் சிதறிவிடுமல்லவா, அதுபோல்தான்! ஓர் அளவு வரை அந்த அறியாமையைப் பயன்படுத்தும் நான், ஒரு நாள் திடீரென்று இந்த மசாலா ராஜேந்தரை வெடித்துச் சிதறச் செய்வேன். அப்போது அந்த அறியாமையும் சுக்கல் நூறாகிவிடும்!

சுதா: எது மாதிரியான படங்களால் மக்களின் அறியாமையைப் போக்க முடியும் என்று நினைக்கிறீர்கள்?

"இருக்கிற ஆட்டங்களிலேயே கண்ணுக்கு நேரா பொய் சொல்ற ஆட்டம் கிரிக்கெட்தானுங்க!"

"ஏன் அப்படிச் சொல்றீங்க?"

"பின்னே கையிலே பந்தை வைச்சுக்கிட்டே 'நோபால் நோபால்'னு புளுகுறாங்களே!"

— அ. வசந்தா.

டி. ரா.: முந்தாநாள் ஒரு விநியோகஸ்தர் வந்தார். "ராஜேந்தர் நல்ல நல்ல காதல் கதைகளைப் படமாக்கிக் கொண்டு வந்த நீங்கள், இப்படி 'உறவைக் காத்த கிளி' படத்தில் 'குடிக்காதே' என்று சொல்லியிருக்கக் கூடாது. 'குடி' என்று சொல்லியிருக்க வேண்டும். ஏனெனில் மக்கள் அறிவுரைகளை வெறுக்கிறார்கள்" என்றார். இப்படிப்பட்ட விநியோகஸ்தர்கள் மத்தியில்தான் நான் எனது தொழிலைச் செய்ய வேண்டியிருக்கிறது.

பதி: அந்தப் படம் சம்பந்தப்பட்ட தகராறு காரணமாகத்தான் நீங்கள் எம். ஜி. ஆரிடம் சென்று முறையிட்டதாகவும், அவர் உங்களுக்குச் சாதகமாக இல்லையென்பதால்தான் நீங்கள் தி. மு. க. வில் சேர்ந்ததாகவும் பேசப்பட்டதே, உண்மையா?

டி. ரா.: அது வெறும் வதந்தி. எந்த அரசியல்வாதியும் எதிர்க்கட்சியில் உள்ளவர்களையும் தன் கட்சிக்கு வரவழைப்பதில் குறியாக இருப்பானே தவிர, தன் கட்சிக்கு வருபவரையும் ஒதுக்கிவிட மாட்டான்.

சுதா: உங்களுக்குப் பிடித்த ராஜேந்தர் யார்? அரசியல்வாதி ராஜேந்தரா? சினிமாக்காரர் ராஜேந்தரா? இல்லை இரண்டுமல்லாத தனிப்பட்டதொரு ராஜேந்தரா?

டி. ரா.: எனக்குப் பிடித்தவன் துணிச்சல்கார ராஜேந்தர்.

லட்சுமி: துணிச்சல்காரர் என்கிறீர்கள். ஆனால் சினிமாவில் 'காம்பரமைஸ்' செய்து கொள்கிறீர்களே?

டி. ரா.: 'ஆடற மாட்டை ஆடிக் கறக்கணும்; பாடற மாட்டைப் பாடிக் கறக்கணும்' என்ற பழமொழி உங்களுக்குத் தெரியாதா? அதற்குப் பெயர் 'காம்பரமைஸ்' இல்லை.

பதி: ஆக, நீங்கள் 'காம்பரமைஸ்' செய்து கொள்ளத் தயாராக இருக்கிறீர்கள்; இல்லையா?

டி. ரா.: எம். ஜி. ஆர். விஷயத்தில் நான் ஒருபோதும் காம்பரமைஸ் செய்ததே இல்லை. 'எம். ஜி. ஆரை எதிர்த்தால் சினிமாவில் இருக்க முடியாது. அவர் கால்களைக் கட்டிக் கொண்டு கண்ணீரால் நீராட்டினால்தான் சினிமாவில் நீடிக்க முடியும்' என்று பலரும் சொன்ன போது, என்னைவிட அதிகச் சம்பளம் வாங்கிக் கொண்டிருக்கும் பெரிய பெரிய சூப்பர் ஸ்டார்களெல்லாம் எம். ஜி. ஆரை எதிர்த்து ஒரு வார்த்தை கூடப் பேசப் பயப்பட்டுக் கொண்டிருக்கும்போது, எம். ஜி. ஆரை எதிர்த்து நிற்பவன் நான். **That is the guts of T. Rajender.** இது துணிச்சல் இல்லையா?

லட்சுமி: உங்கள் படத்தின் இழையோட்டமாக சமுதாயக் கருத்துக்கள் வெளிப்படும் என்று சொன்னீர்களே, அப்படியென்ன சொல்லியிருக்கிறீர்கள்?

டி. ரா.: 'ஒரு தலை ராகம்,' 'தங்கைக்கோர் கீதம்,' ஆகிய படங்களில் 'ஏழைப் பெண்களை காதலிக்காதீர்கள். ஆண்களில் யோக்கியர்களைக் காண்பது கஷ்டம்' என்பதைச் சொல்லியிருக்கிறேன். காரணம், ஓர் ஏழைப் பெண் காதலில் தோல்வியடைவது குளக்கரையில் வழுக்கி விழுவது மாதிரி; அனைவருக்கும் தெரிந்து போகும். அதனால் அவள் வாழ்க்கை பாதிக்கப்படும். ஆனால் பணக்காரப் பெண்கள் காதலில் தோல்வியடைவதென்பது பாத்ரூமுக்குள் வழுக்கி விழுவது மாதிரி; யாருக்கும் தெரியாது. அதனால் அவள் வாழ்க்கையும் பாதிக்கப்படாது. எனவேதான் ஏழைப் பெண்களைக் காதலிக்க வேண்டாம் என்கிறேன்.

அமர்: இப்போது எடுத்துக் கொண்டிருக்கும் 'மைதிலி என்னைக் காதலி' படத்தின் இழையோட்டமாக எதை வைத்திருக்கிறீர்கள்?

டி. ரா.: பெண் விடுதலையை! 'பெண்களே நீங்கள் குனியக் குனிய இந்த ஆண்கள் குட்டிக் கொண்டேதான் இருப்பார்கள். அதனால் நிமிருங்கள்' என்று சொல்லுகிறேன். கற்பு என்பது ஆண்களுக்கும் வேண்டும் என்கிறேன்.

சுதா: தேர்தலில் போட்டியிடுவீர்களா?

டி. ரா.: இந்த மக்களின் அறியாமையைப் பயன்படுத்தி நான் தேர்தலில் நின்று வெற்றி பெற முயலவில்லை. அமிதாப்பச்சன் வெற்றி பெறுகிறார்; பகுகுணா தோற்கிறார் என்றால் என்ன நாடு இது? வெட்கமாக இருக்கிறது. ஆனால், எதிர்க்கட்சிக்காரர்கள் ஒரு பிரபலமான சினிமாக்காரரைப் போட்டியிட வைத்தால், அவரை எதிர்க்கவாவது நான் கண்டிப்பாகப் போட்டியிடுவேன். அதில் சந்தேகமேயில்லை.

பதி: இன்றைய இளைய தலைமுறையினருக்கு உங்கள் சினிமா மூலம் நீங்கள் என்னதான் சொல்லுகிறீர்கள்?

டி. ரா.: பகல் முழுவதும் காகிதங்களைப் பொறுக்கிக் கொண்டிருந்துவிட்டு, இரவில் 47, நல்லதம்பி தெருவில் பசியோடு படுத்திருந்த இந்த ராஜேந்தர் — ஒருதலை ராகம் படம் வெளியான போது, அதில் இருட்டடிப்புச் செய்யப்பட்டதால், அந்தப் படத்தைத் தியேட்டரில் சென்று பார்ப்பதற்கு ரூ. 1.80 இல்லாமல் தவித்த இந்த ராஜேந்தர் — இந்த அளவுக்கு வளர்ந்திருக்கிறானே, எப்படி? உழைப்பும் புத்திசாலித்தனமும்தான்! எனது இந்த முன்னேற்றமே இளைஞர்கள் கற்றுக் கொள்ள வேண்டிய ஒரு விஷயமல்லவா! இதை விடவும் நான் பெரிதாக என்ன சொல்லி விட முடியும்!

தொகுப்பு: **ப்ரியன்.**

அட்டை வண்ணப்படம்,
படங்கள்: **மஹேகர்.**

அலமாரியிலிருந்த டப்பாவைத் தேடிச் சேமியா பொட்டலத்தை எடுக்கையில் பாயசம் அவசியம் செய்யத்தான் வேண்டுமா என்ற எண்ணம் தோன்றியது. இப்படி தடபுடல்கொட்டி இனிப்போடு விருந்து சமைக்க நரேன் என்ன அவ்வளவு ஸ்பெஷலா என ரவிச்சந்திரன் கேட்பது போலத் தோன்றியது.

அவள் சேமியாப் பொட்டலத்தைப் பிரிப்பதா வேண்டாமா என சிறிது நேரம் தயங்கினாள். நரேன் இந்த வீட்டிற்கு முதல் தடவையாகச் சாப்பிட வரப் போகிறான். முதல் தடவையாக இந்த வீட்டிற்குச் சாப்பிட வரும் உறவினர்களுக்கும் நண்பர்களுக்கும் பாயசத்துடன் விருந்துகொடுப்பது இந்தவீட்டிலுள்ள வழக்கம்தான். இன்றுவரை அப்படித்தான் நடந்து வந்திருக்கிறது. ஆகவே இன்று நரேனின் முதல் வருகைக்காக நான் பாயசம் பண்ணத்தான் வேண்டும். இதில் எதுவும் ஸ்பெஷல் இல்லை என்று தனக்குள் சொல்லிக் கொண்டாள்.

சோபாவில் கணவன் ரவிச்சந்திரன் இரு கைகளிலும் ஏந்தியிருக்கும் செய்தித்தாளை விரித்து முகத்தை அதில் மூழ்க வைத்திருப்பதைப் பார்த்தாள். அவன் கண்கள் தான் பேப்பர் பார்த்துக் கொண்டிருக்கின்றன. கவனம் நிச்சயமாக அதில் இல்லை என்று ஸௌம்யாவுக்குத் தோன்றிற்று.

ஏலக்காயைப் பிரித்துப் பொடி செய்கையில் ரவிச்சந்திரன் உட்கார்ந்திருக்கும் நிலையே திரும்பத் திரும்ப நினைவுக்கு வந்தது. நேற்று சாயங்காலம் ஆபீஸிலிருந்து திரும்பியவுடன் 'நாளை காலை நரேன் இங்கு வருவதாகச் சொல்லியிருக்கிறார். காலை வேளையாயிருப்பதால் சாப்பாடும் நம்மோடுதான் என்று சொல்லியிருக்கிறேன்' எனத் தான் ரவிச்சந்திரனிடம் சொன்னபோது அவனது முகம் லேசாக இருண்டுபோனதை அவளால் உணர

அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி

ரூ 500/- இரண்டாம் பரிசுக் கதை



முடிந்தது. சுவாரசியமின்றித் தலையாட்டி விட்டு அவன் நகர்ந்ததும் அவளது மனம் கலங்கிப் போயிற்று. நரேனின் பேச்சை எடுத்தாலே இவன் முகம் மாறிப் போவது ஏன்? அதுவும் அன்று அவனைக் கடைத்தெருவில் பார்த்து அறிமுகம் செய்ததிலிருந்துதான் இப்படி இருக்கிறான். நரேனின் உருவத்தையும், நிறத்தையும் பார்த்ததால் ஏற்பட்ட வீண் ஐயமா இது? நரேன் அலுவலகத்தில் தனக்குப் பக்கத்து ஸீட்காரன் என்பதும், அவன் தனது வேலையை அழகுறச் செய்து முடிக்கும் நேர்த்தியும், அவனது வெளிப்படையான களங்கமற்ற பேச்சுமே தன்னைக் கவர்ந்த விஷயங்கள் என்பதையும் ரவி புரிந்து கொள்வாரா? நரேனிடம் இருக்கும் இதே விஷயங்கள் ஒரு பெண்ணிடம் இருந்தாலும் என் ரியாக்ஷன் இதே விதத்தில்தான் இருக்கும் என்பதை இவரால் புரிந்து கொள்ள முடியுமா? எனது மனத்தில் இருக்கும் உண்மையான எண்ணங்களை இவரது மூளையில் புகுத்த முடிந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்?

பாயசத்தைக் கரண்டியால் நன்கு ஏலப் பொடியோடு சேர்த்து கலக்கிவிட்டு மூடினாள். ரவியின் இறுகிய முகத்தைத் திரும்பவும் நினைக்கையில் ஏதேனும் சாக்கிட்டு நரேன் இன்று இங்கு வராமல் போக 'நேர்ந்தால் நன்றாக இருக்குமே எனத் தோன்றியது. 'நாளை கண்டிப்பா உங்க வீட்டுக்கு வரப் போறேன்' என்றான் நரேன். அதிலும் அன்று ரவியை அவன் கடைத் தெருவில் சந்தித்ததில் இருந்து அவனுக்கு இங்கு வரவேண்டும் என்ற எண்ணம் அதிகரித்துப் போய்விட்டது! ரவியின் அறிவும் நிதானமும் அவனுக்கு ரொம்பவும் பிடித்துப் போய்விட்டது! 'ஸௌம்யாவுக்கேற்ற ரவிச்சந்திரன்' என்று சொல்லிச் சொல்லி மாய்ந்து போகிறான். 'எவ்வளவு படித்திருக்கிறார் அவர். அதுதான் 'அவர் முகம் அப்படிப் பிரகாசமாக இருக்கிறது' என்கிறான்!' 'அந்த முகம் கறுத்து இருண்டு போகும் சமயங்கள் நிறைய உண்டு நரேன். அது பற்றி உனக்குக் கொஞ்சமாவது தெரியுமா?'

ட்ரிங்....

வாசலில் அழைப்பு மணி ஒலித்தது.

வந்திருப்பது நரேன்தான் என ஸௌம்யாவின் உள்மனம் சொல்லிற்று கடைசியில் வந்தே விட்டானா?

வாசற்கதவைத் திறந்ததும் உயரமாய், வெண்மையான சலவைக்கு விளம்பரத்துக்கு நிற்கலாம்போன்ற சுத்தமான உடையோடு நின்றிருந்தான் நரேன். இவளைப் பார்த்ததும் வரிசைப் பற்கள் பளிரிட ''ஹலோ. குட் மார்னிங்'' என்று சொன்னான்.

''குட்மார்னிங். ப்ளீஸ் கம் இன்'' என்று சொல்லி அவனை ரவிச்சந்திரன் உட்கார்ந்திருக்கும் ஹாலுக்கு அழைத்து வருகையில் தன் கால்கள் லேசாக நடுங்குவதை உணர்ந்தாள் ஸௌம்யா.



நரேன் இயல்பாக நடந்து ரவிச்சந்திரன் அருகேவந்து "ஹலோ ரவிச்சந்திரன். ஹௌ ஆர் யூ?" என்று சொல்லிவிட்டு அதே பளீரிட லோடு சிரித்தான்.

பேப்பரை மடித்தவாறே, "ஓ. ஐ'ம் பைன்" என்று சொல்லிவிட்டு ஸௌம்யா வின் முகத்தை ஏறிட்டுப் பார்த்தான் ரவிச் சந்திரன். நரேனின் வருகையால் தான் ரொம்பவும் மகிழ்ந்துபோய்விட்டதாக அவன் எண்ணி விடக்கூடாது என நினைத்துத் தனது இதழ்களில் இயல்பாகப் படிந்திருந்த புன் னகையின் அளவைச் சுருக்கி முகத்தைச் சாதாரணமாக்கிக் கொண்டாள் ஸௌம்யா.

அவள் நரேனை எதிரிலிருந்த சோபாவைக் காட்டி உட்காரச் சொன்னாள். இவர்களைப் பேசச் சொல்லிவிட்டுத்தான் உள்ளே போய் விடலாமா என்ற கட்டுப்பெட்டித்தனமான எண்ணம் ஒரு நிமிடம் தோன்றியது. உடனே அவளுக்கே அது விநோதமாகப் பட்டது. கொஞ்ச நேரமாவது நாம் அங்கே உட்கார்ந் திருக்க வேண்டும். அதுதான் மரியாதை. அதிலும் வந்திருப்பவன் தன்னுடைய சகா அவள் கணவன் ரவி அருகே போய் உட் கார்ந்தாள்.

ரவிச்சந்திரனும் அவனது உரையாடலில் இயல்பாகப் பங்கு கொள்வதைப் பார்த்து ஸௌம்யாவுக்கு மூச்சு சீராக முயன்றது. தனது மனத்திலுள்ள கள்ளத்தை மறைத்து இவ்வளவாவது இவன் மூன்றாம் மனிதரின் எதிரில் நாகரிகமாக நடந்து கொள்கிறானே என்று ஆறுதலாக இருந்தது. ஆனால் ரவி நடத்தும் மௌன யுத்தமெல்லாம் ஸௌம்யா விடம்தான் – ஒரு சைகையில், ஒரு முகக் குறிப்பில் அவளிடம் அவனுக்கு இருக்கும் அதிருப்தியை வெளிப்படுத்தி, அவளது மனம் சித்திரவதைப்பட்டுப் போக இதைவிட வேறேதேனும் வேணுமா?

மானேஜர்: "தினமும் இரண்டு காப்பி வரவழைக்கிறீங்களே, கூடவே ஒருத்தர் இருப்பதைப் போல்...."

கிளார்க்: "ஆமாம் சார்! நான் ஒரு காப்பி சாப்பிட்டதும் புது மனுஷனாயிட றேன். அந்தப் புது மனுஷனுக்கு இன் னொரு காப்பியைக் கொடுக்கிறேன்!"

— ஆர். எஸ். சுப்பிரமணியன்.



ரவி, நரேந்திரனைப் பார்த்துப் புன்னகைத்த வாறே பேசினாலும் அவனது கண்களும் மனமும் நரேனை எடை போடுவதிலேயே குறியாக இருப்பதை அவளால் உணர முடிந் தது. இதன் காரணமாகவே அலுவலகத்தில் நரேனுடன் சகஜமாகப் பழக முடிவதைப் போல இப்போது இயல்பாக இருக்க முடிய வில்லை. உடல் நரம்புகள் இறுகிக்கொண்டாற் போல ஒருவித அசாதாரண நிலையை உணர்ந் தாள். அவளது இந்த வித்யாசமான போக்கு நரேனுக்குத் தெரிந்துவிடப்போகிறதே என்று கவலையாகவும் இருந்தது.

இந்த நினைப்பு எழுந்தவுடன் அவள் தன்னைச் சுதாரித்துக் கொள்ள முயன்றாள். என்ன காரணம் கொண்டும் வீடு தேடி வந் திருக்கும் நபரின் முன் தன் முகவாட்டத்தைக் காட்டிக் கொள்வது நாகரிகமல்ல.

அவள் உடனே ரவியை உரையாடலின் நாயகனாக்கி, தன் ஆபீஸ் நடவடிக்கைகளை அவ்வப்போது அங்கே வெடிக்கும் சிரிப்பு வெடிகளை வலுக்கட்டாயமாக நினைவில் கொண்டு வந்து அவனிடம் சொல்லி.... உனக்கும் எனக்கும் இடையே எதுவும் இல்லை என்பதை உணர்த்துவது போலச் சூழ்நிலையை எளிதாக்க முயன்றாள்.

ரவி அவ்வப்போது அவளுக்குப் பதில் சொல்லியும், சில சமயங்களில் சிரித்து வைத் தாலும் அவனது மன ஆழத்தில் ஓடும் எண் ணங்களை அவளது உள்மனம் தெளிவாகச் சொல்லிக் கொண்டே இருந்தது.

நரேன் இவளைப் பார்த்துப் பேசும்போதும் சிரிக்கும்போதும் அவை இவளிடமிருந்து எப்படிப்பட்ட பிரதிபலிப்பையும் எதிரொலி யையும் உண்டாக்குகின்றன என்று அவன் அளந்து கொண்டிருப்பதை அவளால் உணர முடிந்தது. காதுகளை விறைத்துக் கொண்டு எச்சரிக்கைத் தன்மையோடு நோக்கும் நாயைப் போல...... சே......

அதற்கு மேலும் அங்கு அமர்ந்திருக்கப் பிடிக்காது எழுந்திருந்தாள் ஸௌம்யா. சீக் கிரமாகச் சாப்பாட்டைப்போட்டுச் சீக்கிரமே நரேனை இங்கிருந்து கிளப்பினால் தேவலை என்றிருந்தது.

"நேரமாயிடுத்து. சாப்பிட்டுட்டு அப் புறமா பேசலாமா" என்று பொதுவாகச் சொல்லிவிட்டு அங்கிருந்து நகர்ந்தாள்.

அவள் தட்டுக்களைத் துடைத்து வைத்துக் கலந்திருந்த சாதவகைகள், அவியல், வறுவல் வகைகள் எல்லாவற்றுக்கும் தனித்தனியே கரண்டிகள் போட்டு, கிண்ணங்களில் பாயசத்தை நிறைத்து, சாப்பாட்டு மேஜை யில்வைத்துவிட்டு அவர்களைக் கூப்பிட்டாள்.

நரேன் அவளது கைவண்ணத்தைப் புகழ்ந்து கொண்டே சாப்பிட்டான். "ரவி, ஆபீசுக்கு லஞ்சுக்கு ஸௌம்யா கொண்டு வர சாப்பாட்டை எல்லாம் அவங்க சாப்பிட றாங்கன்னு நெனச்சிட்டிருக்கீங்க. முக்கால் வாசி காலி பண்றது அடியேன்தான்!"

"........"

"சமையலிலேருந்து ஆபீஸ் வேலை வரைக்

கும் எதுலே பார்த்தாலும் ஸௌம்யா மீன்ஸ் பர்பெக்ஷன். சும்மா சொல்லக் கூடாது ரவி. ரியலி யூ ஆர் பார்ச்சுனேட்.''

ஸௌம்யா ரவியின் முகம் லேசாக மாறுபடுவது கண்டு உள்ளூற கருண்டு போனாள். 'ஐயோ நரேன்! இதென்ன. இவ்வளவு களங்கமற்று வெளிப்படையாகப் பேசுகிறாய். மாசு மறுவற்ற மனம் படைத்திருப்பது ஒருவிதத்தில் மிகப் பெரிய கஷ்டம்தான். மாசுள்ள எதிராளியின் மனம் புரியாமலேயே போய் விடும்!'

அவர்கள் சாப்பிட்டு முடித்துத் திரும்பவும் ஹாலுக்குப் போய் உட்கார்ந்ததும் அவள் மேஜையை துடைத்து, சாமான்களை ஒழித்து வைக்க ஆரம்பித்தாள். மனம் மட்டும் ரவியின் போக்கை நினைத்து வருந்திக் கொண்டே இருந்தது. 'இன்று காலையிலிருந்து நமக்குத்தான் எவ்வளவு டென்ஷன்' என்று நினைத்து மனம் ஆயாசப்பட்டது: வேலை செய்கையில் எவ்வளவு கலக்கம். அளந்து அளந்து பேசி... தயங்கி தயங்கித் தவித்து.... இவ்வளவு தயக்கமும் குழப்பமும் எழக் காரணம் என்ன? ரவி தன்னை எந்த விதத்திலாவது சந்தேகப்பட்டு விடுவானோ என்பதனால்தானே? நம் மனத்தில் நிச்சயமாகக் களங்கமில்லை. நரேனும் பரிசுத்த மனத்தினனாகத்தான் இருக்கிறான். அப்படி இருக்கையில் நாம் எதற்காகக் கலங்க வேண்டும்? ரவி உம்மென்றிருக்கிறானென்றால் அது அவன் மனத்திலும் கண்ணிலும் உள்ள கோளாறினால் அல்லவா? ஆனால் இப்படி எண்ணிச் சமாதானம் அடைய முடியவில்லையே நம்மால். இது எதனால்? அவன் என்னை எந்தவிதத்திலும் தவறாக நினைத்துக் கொண்டுவிடக்கூடாதே என மனம் ஏன் இப்படிப் பரிதவித்துப் போகிறது?

எனக்கு ஏற்பட்டிருக்கும் இதே நிலை ஓர் ஆணுக்கு ஏற்பட்டிருந்தால் அவன் இந்த அளவு பொருட்படுத்திக் கலங்கியிருக்க மாட்டான் எனத் தோன்றியது. ஒரு ஆண் மாதிரி பெண்ணினால் அநேக விஷயங்களை அலட்சியமாக ஒதுக்க முடிவதில்லை. இதன் காரணம் என்னவாக இருக்கும்? பெண்ணின் மெல்லிய உணர்வுகளை அவளைச் சிறைப்படுத்துகின்றனவா? சமயங்களில் சிறுமைப்படுத்தவும் செய்கின்றன போலும். இந்த உணர்வுகள் அவர்களது படைப்பாலேயே அவர்களது தன்மையோடு ஒன்றிப் போயிருக்கின்றன. ஆகவே படைப்பிலேயே ஆண்டவன் பாரபட்சத்தைக் காட்டித்தான் படைத்திருக்கிறான். ஆணுக்கு எல்லாமே சுலபமாகவும், பெண்ணிற்கு அவை கொஞ்சம் கடினமாகவே இருக்கட்டும் என்று. ஆக இப்படிப் படைப்பின் அஸ்திவாரத்திலேயே பேதமும் பாரபட்சமும் இருக்கையில் பெண்ணின் உரிமைகளை, சமூக சமத்துவத்தை சட்டத்தின் மூலம் ஆர்ப்பாட்டத்தால் வலியுறுத்துவதால் மட்டும் என்ன பயன் விளைந்து விடப்போகிறது? வாயைவிட்டுச் சொல்ல இயலாத மனத்துயரத்தையும் துன்பத்தையும் பெண் காலங்காலமாய் அனுபவித்துக் கொண்டேதான் இருக்க வேண்டும்!



**பூச்சி மனிதன்**

திரைப்படங்களுக்கு பாம்பு, ஆடு மாடு என வாடகைக்கு கொடுப்பவர்களை அறிவோம். ஆனால் புழு, பூச்சி? ஆண்டி மில்லர் என்பவர் திரைப்படங்களுக்கு புழு, பூச்சி சப்ளை செய்வதில் மன்னர்... ஹாலிவுட் படங்களுக்கு ஒத்துழைக்கும் இவர், கடைசியாக கிடைத்த ஆர்டரின் படி, இண்டியானா ஜோன்ஸ் திரைப்படத்திற்கு சப்ளை செய்தவை:

50,000 — வெட்டுக்கிளிகள்
5000 — கரப்புகள்
12 — மீசைக்கார பூச்சிகள்
10 — எட்டுகால் பூச்சிகள்

தகவல்: ட்ரூல்ரிக்ஸ்.

ஹாலில் நரேன் வாய்விட்டுச் சிரிக்கும் சப்தம் கேட்டதும் அவள் சட்டென்று சுய நினைவுக்கு வந்தாள். இதென்ன ஏதேதோ தத்துவ ஆராய்ச்சியில் மூழ்கிப் போய் நான் என்னையே குழப்பிக் கொள்கிறேன். இப்படி அதிகம் யோசனை செய்ய செய்யத்தான் நான் படும் மனத்துயரத்தின் அளவும் அதிகரித்துக் கொண்டே போகிறது. நியாயம், சத்யம் இவற்றை அலசிவிட்டு நிஜ நடப்புகளை நேரில் காணும்போது, கருண்டு போகிறேன். அதிகம் ஆராயாமல் வாழ்க்கையை, அதன் நடப்புகளை இயல்பாக எடுக்கப் பழகி, உணர்ச்சிகளைக் கொஞ்சம் மரத்துப் போக வைத்தால் போதும். சுற்றி இருப்பவர்களின் குணநிசயங்களை அலசி ஆராயாமலும் இருக்கக் கற்றுக் கொள்ள வேண்டும். அப்படி அலசி ஆராய்ந்தால், எந்த உறவுமே மிஞ்சுமா என்பது சந்தேகம்தான்!

''நான் கிளம்பறேன், ரவிச்சந்திரன் சார். தாங்க்யு வெரி மச். ஐ ஹாட் எ நைஸ் டைம் வித் யூ. ஸௌம்யா இன்னுமா உங்க வேலை முடியல்லே?''

நரேன் கூப்பிடுவது கேட்டு அவள் ஹாலுக்கு வந்தாள்.

''தாங்க்யு வெரி மச் பஃர் யுவர் நைஸ் லஞ்ச். வரட்டுமா. இன்னைக்கு செஸ் டூர்னமெண்ட் இருக்கு ஆபீஸிலே. இரண்டு மணிக்கு வரச் சொல்லியிருக்காங்க.''

அவனுடன் வாசல் வரை வந்து வழியனுப்புகையில் வழக்கமாக எல்லோரிடமும் சொல்லும் ''கம் அகெய்ன் ப்ளீஸ்'' என்று இயந்திரத்தனமாகச் சொல்ல ஆரம்பித்து விரைவாக நாக்கைக் கட்டுப்படுத்தினாள். இவன் இனி வரவேண்டாம். இந்த நல்ல மனத்தைக் காயப்படுத்தியாவது இங்கு வருவதற்கு தடை போடத்தான் வேண்டும்.

வாசற்கதவைச் சாத்திவிட்டு உள்ளே வந்து அங்கே நின்றவாறு இவளைப் பார்த்துக் கொண்டிருக்கும் ரவியைப் பார்த்து அவளுக்கு உடல் முழுவதும் ஒரு நடுக்கம் பரவியது.....

# இளைஞர் ஆண்டு லட்சியம்

**ஆரோக்கியத்துக்கு யோகா**

இந்த இளைஞர் ஆண்டில் உடலையும் மனசையும் கட்டுப்படுத்தி வலுவடையச் செய்யும் யோகாசனப் பயிற்சியை மேற்கொண்டிருக்கிறேன். நண்பர்கள் எல்லாரையும் இப்பயிற்சியை முறைப்படி கற்றுக் கொண்டு செய்யுமாறு அறிவுறுத்தி வருகிறேன்.

—ந. மூர்த்தி, கோவை.

**நான் பெற்ற வெற்றி...**

பீடாக்கடை ஒன்றை வெற்றிகரமாக நடத்தி வரும் பட்டதாரி இளைஞன் நான். என்னைப்போல் இன்னும் ஐந்து பேரையாவது இந்தத் தொழிலில் ஈடுபடுத்தி வெற்றியடையச் செய்ய வேண்டும் என்பது என் இலட்சியம். ஒவ்வொன்றாக ஐந்து பீடாக் கடைகள் அமைக்கத் திட்டமிட்டுள்ளேன்.

—கே. எஸ். வேலு, சேலம்—1.

**கிராம சேவிகா**

இந்த ஆண்டு என் மருத்துவப் படிப்பு முடிவடைகிறது. என் சேவையை முழுக்க முழுக்கக் கிராமத்து மக்களுக்கும், வசதியற்ற பாமர ஜனங்களுக்கும் அளிக்க முடிவு செய்திருக்கிறேன்.

— கீதா, சென்னை—34.

**சினிமா பார்க்க மாட்டேன்**

திரைப்படங்களால் இளைஞர்களுக்கு உண்மையான பயன் ஏதும் கிடைப்பதில்லை. மாறாக இளமையை, குறிப்பாகப் பெண்மையை, ஒரு வியாபார சாதனமாகவே பயன்படுத்தி வருகிறது சினிமா உலகம். அதனால் **இந்த ஆண்டு சினிமா பார்ப்பதில்லை என்று** பிரதிக்ஞை செய்துள்ளேன்.

—ரஞ்சனி நாராயணன், பாண்டிச்சேரி.

**கடமையும் வாய்மையும் இரு கண்கள்**

வேலையில்லாப் பட்டதாரி இளைஞர்களுக்கு இன்று நிறையவே அனுதாபம் கிடைக்கிறது. ஆனால் வேலை கிடைத்ததுதான் தாமதம், அதே இளைஞர்கள் அலட்சியமும் கர்வமும் கொள்கிறார்கள். லஞ்ச ஊழல் விவகாரங்களில் ஈடுபடுகிறார்கள். விரைவிலேயே



வங்கி உத்தியோகத்தில் அமர இருக்கும் நான் இதற்கு விதிவிலக்காகத் திகழ விரும்புகிறேன்.

—பி. கணேசபாண்டியன், கோவில்பட்டி.

**களிப்பூட்டும் கதைகள்**

நாளையத் தலைவர்களான இன்றைய குழந்தைகளுக்கு நற்சிந்தனையை வளர்க்கும் கதைகளைச் சொல்லும் நிகழ்ச்சியை முறைதவறாமல் நடத்தி வருகிறேன். இதை மேலும் சிறப்பாக நடத்திக் குழந்தைகளுக்குக் களிப்பூட்டி, சிறந்த தலைவர்கள் உருவாகவும், என்னால் இயன்றதைச் செய்ய ஆவல் கொண்டுள்ளேன்.

—பால நடராஜன், கோனுபட்டு.

**திருவானைக்காவலுக்கு வாசக சாலை**

படித்த, வேலையற்ற இளைஞர்கள் பலர் உள்ள எங்கள் திருவானைக் காவல் பகுதியில் ஒரு வாசக சாலை கூடக் கிடையாது. இந்த இளைஞர் ஆண்டிற்கு அரசு அனுமதியுடன் நல்ல வாசகசாலை ஒன்றை அமைத்துவிடத் தீவிரமாக முயன்று வருகிறேன்.

—எஸ். சோமசுந்தரம், திருச்சி—5.





### தன் கையே தனக்கும் பிறருக்கும் உதவி

தொழிற்துறை அனுபவம், மற்றும் கல்வி அறிவை ஓரளவுக்குப் பெற்றுள்ளேன். இனியும் இன்னொருத்தரிடம் வேலை பார்ப்பதை விட்டுவிட்டு, சுயமாகத் தொழில் ஆரம்பித்துப் பத்துப் பதினைந்து பேர்களுக்காவது இந்த ஆண்டின் இறுதிக்குள் வேலை வாய்ப்பு அளிக்க வேண்டும் என்பது என் லட்சியம்.

— டி. மாரிமுத்து, உதகை.

### பாத்திரம் அறிந்து புத்தகம் வழங்கு

ஆண்டுதோறும் நன்றாகப் படிக்கும் இரண்டு வசதியற்ற மாணவர்களுக்குத் தேவையான புத்தகங்களும் சீருடையும் வாங்கித் தருவது என்று முடிவெடுத்திருக்கிறேன்.

—பி. தங்கவேலு, கரூர்.

### படுகுழியில் விழாமல் காக்கிறோம்

போதை மருந்துகளுக்கு அடிமைப்பட்டதால் வாழ்வே சீரழிந்து போன பல இளைஞர்களின் வரலாற்றை என் மகனுக்குக் கூறி வந்தேன். இந்த வருடம் அவனும் என்னுடன் சேர்ந்து கொண்டு அந்தத் தீமையைப் பற்றி





இளைஞர்களுக்கு விரிவாக எடுத்துரைக்கும் பணியை மேற்கொண்டுள்ளான்.

—சுவர்ணம் சந்தானம், பெங்களூர்—3.

## வாசகர் பங்கு



### இரவுப் பள்ளியில் அடிப்படைக் கல்வி

படிப்பறிவில் பின்தங்கி உள்ள எங்கள் கிராமத்தில் பத்தாவது கூடப் படிக்காத இளைஞர் கூட்டம் மிகப் பெரியது. சில இளைஞர்களின் ஒத்துழைப்புடன் இரவுப் பள்ளிக்கூடம் ஆரம்பித்துக் கூடுமானவரை எல்லோருக்கும் அடிப்படைக் கல்வி அளிக்க வேண்டும் என்பதே என் லட்சியம்.

—பி. எஸ். பாலசுப்பிரமணியன்,
கொடியாலம்.

### புதுமையான சேமிப்புக் கணக்கு

என் நண்பர்களிடமும் உறவினர்களிடையேயும் கண் தானம் செய்வது குறித்துப் பேசி வருகிறேன். இதனால் மனிதன் இறந்த பிறகு மண்ணோடு மண்ணாகிப் போகும் கண்கள் பார்வையற்றவர்களின் விழிகளுக்கு ஒளி தரு

கின்றனை. இதற்காக முன்னமே பதிவு செய்து கொள்ள வேண்டிய அலுவலகத்திற்கு நண்பர்களை அழைத்துச் சென்று ஒரு 'சேமிப்புக் கணக்கை' ஆரம்பிக்க இருக்கிறேன்.

— என். மாரியப்பன், மதுக்கரை அஞ்சல்.

### அரசியல்* சகதியில் சிக்கியவருக்கு

பெண் குலத்தின் கண்ணீருக்குக் காரணமாய் இருந்து வரும் வரதட்சிணைக் கொடுமையை ஒழிக்க இயன்றதைச் செய்வேன். மிக இளம் பிராயத்திலேயே சுய சிந்தனை இன்றி அரசியலில் புகுந்து, படிப்பை மறந்து விடும் இளைஞர்களை நல்வழிப்படுத்த முயற்சி செய்வேன்.

— ஆர். நந்தகோபால், திருச்சி—20.

### களிப்பூட்டும் கணிதம்

கணிதத்தில் எம்.எஸ்.ஸி பட்டம் பெற்றுள்ளேன். என் வீட்டருகே உள்ள குழந்தைகள் பலர் பணம் கட்டி டியூஷன் பயில வசதியற்றவர்கள். அவர்களுக்கு இலவசமாய்க் கணிதம் சொல்லித் தந்து அவர்களின் முன்னேற்றத்தைக் கண்டு களிக்கிறேன்.

— வி. உமா, சென்னை — 18.

### மாங்கன்று விநியோகம்

மரங்கள் வளர்ப்பு அனைத்துலக ரீதியில் அதி முக்கியத்துவம் பெற்றுள்ள இந்நாளில் மாங்கன்றுகளை நண்பர்களுக்கும், மரம் நடத் தோட்ட வசதி உள்ளவர்களுக்கும் கொடுத்து வருகிறேன். என் அனுபவத்தில் மரம் நடச் செய்வதை விட மரம் வெட்டுவதைத் தடுப்பதே சிரமமான காரியம். இதையும் இயன்றவரை செய்து வருகிறேன்.

— கே. பி. தவசு, சென்னை — 81.

### நில்! யோசி! தொழில் செய்!

வேலையில்லாப் பட்டதாரிகள் ஏராளமாய் லஞ்சம் கொடுத்து வேலை பெறுவதைக் காட்டிலும் அந்தப் பணத்தோடு மேலும் சிறிது முதலீடு செய்தால் சுயமாகத் தொழில் ஆரம்பித்து வெற்றிகரமாய் நடத்தலாம் என்று யோசனை கூறுவதே இளைஞர் ஆண்டில் என் குறிக்கோள்.

—ஏ. சந்திரன், வேலூர்—6.

**புளோப்ளாஸ்ட் நிறுவனம் வழங்கும் வி. ஐ. பி. ஸ்சூட்கேஸைப் பரிசாகப் பெறுபவர்:**

**வி. உமா,**
**15, நைநான் தெரு,**
**அபிராமபுரம்,**
**சென்னை—600 018.**



பம்பாய் ரயில் ஒன்றில் ஒரு வாலிபர் வேலைக்குச் செல்லப் பயணம் செய்து கொண்டிருந்தார். பிக்பாக்கெட்காரன் ஒருவன் வாலிபனின் பர்ஸை நைஸாக அடித்துவிட்டான். அந்த ரயில் ஒரு ஸ்டேஷனில் நின்றபோது பக்கத்து தண்டவாளத்தில் புறப்பட்டுக் கொண்டிருந்த இன்னொரு ரயிலில் தாவி ஏறினான். ஆனால் பிடி நழுவி கீழே விழுந்து புறப்பட்ட ரெயிலின் கீழே அடையாளமே தெரியாமல் கூழாகிப் போனான். இதற்கிடையில் வாலிபன் பயணம் செய்த ரயில் புறப்பட்டு போய்விட்டது. திருடனை அரைத்து கூழாக்கிய ரயில் விவரமறிந்து நின்றது. போலீசார் வந்து சடலத்தைப் புரட்டியபோது, அந்தத் திருடன் கொள்ளையடித்த பர்ஸ் இருக்கக் கண்டார்கள். அதிலிருந்த முகவரிக்குத் தகவல் கொடுத்து விட்டார்கள். வாலிபனின் வீட்டிலிருந்தவர்கள் ஓடோடி வந்தார்கள். உருவமே தெரியாமல் சிதைந்து கிடந்த சடலத்தை வீட்டுக்கு எடுத்துச் சென்று இறுதிச் சடங்குக்கு ஏற்பாடு செய்தார்கள். இதற்கிடையில் ரயிலை விட்டு இறங்கிய வாலிபன் தன் பர்ஸ் கொள்ளையடிக்கப்பட்டது அறிந்து, அங்கிருந்து நடந்தே தன் ஆபீசுக்குப் போய், நண்பரிடம் கொஞ்சம் பணம் கடன் வாங்கிக் கொண்டு மாலை வீடு திரும்பினான். வீட்டிலிருப்பவர்களுக்கு ஒரே அதிர்ச்சி!

— திருச்செங்கோடு, ப. கந்தசாமி.






# பிலிப்ஸ்

# உங்கள் 'செவி இன்பத்திற்கு' மட்டும்.

## பிலிப்ஸ்® ஸவுண்ட்® அரவுண்ட்®




**உங்களது பாக்கெட்டுக்குள் அடங்கும் அழகிய சிறிய ட்ரான்ஸிஸ்டர், விலையும் அதிகமில்லை, போகுமிடமெல்லாம் எடுத்துச்செல்ல வசதியானது.**

இப்போது மற்றவர்களுக்கு இடைஞ்சல் இல்லாமல் எவ்வளவு பெரிதாக வேண்டுமானாலும் வைத்துக் கேட்டு மகிழ ஒரு ரேடியோ—பிலிப்ஸ் ஸவுண்ட் அரவுண்ட். காரணம் இதன் ஹெட் ஃபோன்கள் மூலம் இசையைக் கேட்டு மகிழலாம். வெகு நேர்த்தியான ஒலியின் தரம் வழங்குவதுடன் மட்டுமின்றி, குறைந்த பவரிலேயே இது இயங்குவதால், பாட்டரிகள் நெடுநாட்களுக்கு உழைக்கின்றன.

உங்கள் பெல்ட்டில் சொருகியோ, தோளில் மாட்டிக்கொண்டோ எங்கும் எடுத்துச் செல்ல வசதியான கேஸில் பிலிப்ஸ் ஸவுண்ட் அரவுண்ட் கிடைக்கிறது.

அனைத்திற்கும் மேல், தன்னை மறந்த இசையுலகிலிருந்து மீண்டும் இவ்வுலகத்திற்கு வரவேண்டுமென்றால் வெகு எளிது. ஹெட் ஃபோனின் ப்ளக்கை எடுத்து விடுங்கள். வழக்கமான ட்ரான்ஸிஸ்டர்கள் போல் ஸவுண்ட் அரவுண்டில் அனைவருடனும் இசை கேட்டு இன்புறலாம்.

கேட்டுப்பார்த்தால் தெரியும், காதில் மாட்டிக் கொள்ளத் தோன்றும்.

**பிலிப்ஸ்–ஐம்பது ஆண்டுகளுக்கும் மேலாக இந்திய வீடுதோறும் விளங்கும் நம்பகமான பெயர்**

# பெண் என்னும் அடிமை

"என்ன கொலை பாதகம் இது? பெத்த தகப்பனுக்கு — கேவலம் ஒரு இருநூறு ரூபாய் — குடுத்ததுக்கு கோர்ட்டுலே கேக்கற மாதிரி ஆயிரம் கேள்வி... உலக மகா பாதகமா இது? அப்பாவுக்கு நாலு காசு கொடுக்க இன்னும் யார் யாரை நான் கேக்கணும்?"

அசையாமல் அவனையே பார்த்துக் கொண்டிருக்கிறாள் வசுமதி. சொல்லிக் கொண்டே போகிறான் ராம்...

"எங்கப்பா சாகும்போது எனக்கு என்ன வயசு தெரியுமா? ரெண்டரை... அவரோட உருவம் கூட எனக்கு சரியா நினைவில்லே... அப்ப அம்மாவோட கைகள்ள நுழைஞ்சவன் தான்... நா இன்னிக்கு ஒரு மனுஷனா உம் முன்னால நிக்கறேன்னா அதுக்கு அவதான் காரணம்...

"என்னை இந்த நிலைக்கு உருவாக்க தேஞ்சு போயிருக்கா எங்கம்மா...

"நா கோயிலுக்கு அதிகமாப் போறதில்லே. என்னா வீட்லயே என்னோட தெய்வம் இருக்கு...

"அவ கொஞ்சம் கண்டிப்பானவதான்... ஆனா அதுதான் என்னை முழுமையாக்கியிருக்கு...

"இதையெல்லாம் நா ஏன் உங்கிட்ட சொல்றேன்னா, முதன் முதலா இந்த வீட்டுக்குள்ள அடியெடுத்து வச்சிருக்க நீ... அதுவும் என் மனைவியா... ஆனா எங்கம்மாவுக்கு எதிரா போர்க்கொடி உயர்த்த நீ நினைச்சா, நா உனக்கு இல்லேன்னு நீ தெளிவா புரிஞ்சுக்கணும்!"

கட்டிலில் மலர்களின் மணத்துக்கு நடுவில் பால் செம்புக்குப் பக்கத்தில் வசுமதி..

அது அவர்களுக்கு முதலிரவு.

அப்படித் தோன்றவில்லை அவளுக்கு... கதா காலக்ஷேபம் கேட்கப் போனது போல இருந்தது. அவனது நீண்ட பிரசங்கம் லேசாக எரிச்சலை மூட்டியது. வாயைப் பிளந்து கொண்டு கொட்டாவி ஒன்று ஜனித்தது.

"எங்கம்மா பால்... நீ சர்க்கரை... நினைவு வச்சுக்கோ...!" தொடர்கிறான் ராம்.

"ஏற்கெனவே ஏதோ ஒரு சினிமால... ரவிச்சந்திரன்னு நினைக்கறேன்... பேசிக்கேட்டிருக்கேன் இதை..." தன்னையும் மீறி சொல்லி விட்டாள்.

"வெளையாடறியா... நா பேசறது வாழ்க்கை!"

"அதுவும் வாழ்க்கையைப் பார்த்துத் தானே செல்லுலாயிட்ல பதிவு பண்றா... 'டேக் இட் ஈஸி'... ஏன் ஸீரியஸா எடுத்துக்கறேள்? நமக்கு இன்னிக்கு முதல் நாள்... இவ்ளோ பெரிய லெக்சர் தேவையே இல்லே.. எனக்கும் எல்லாம் தெரியும்.. இன்னும் சொன்னா நா தாயில்லாத பொண்ணு நாலு வயசு முதலே தகப்பனாரால வளர்க்கப்பட்டவ. தாயோட அன்புக்கு ஏங்கினவ.. நானா எந்தப் பிரச்னைகளையும் உருவாக்க மாட்டேன். போதுமா?"

"நம்பறேன்!"



''நடைமுறைல பார்த்துக்கலாம்... நீங்க... சரி, அணைச்சுக்கலாம்!''

''லேட்டையா, உன்னையா?''

''மறுபடியும் சினிமா...!''

சிரித்தான்.

சிரித்தான்..

*****

ஷாம்பூ போட்டுக் குளித்துவிட்டு மத்தியில் கிளிப் ஒன்றைப் போட்டுக் கொண்டு கேசங்கள் புஸ்ஸென்று பறக்க வெளியே வந்தாள் வசுமதி...

''வசு... இங்க வாம்மா...!''

''என்னம்மா?''

''தலை ஏன் இப்படிப் பறக்கறது? நன்னு ஒரு கை எண்ணெ வச்சு அழுந்தத் தேச்சுக்கோ... அப்பத்தான் படிய வார முடியும்.''

''அய்ய! அது நன்னாயிருக்காதே!''

**தேவிபாலா**

இட்லியை விண்டு மிளகாய்ப் பொடியில் புரட்டிக் கொண்டிருந்த ராம், சரேலென நிமிர்ந்தான். அதான் அம்மா சொல்றாளே.. அறிவில்லை உனக்கு? நல்லது கெட்டது அவளுக்குத் தெரியாதா? சொன்னதைச் செய்...''

''ஏண்டா அவளைத் திட்டறே?'' கொஞ்சம் பெருமை கலந்து மகனைப் பார்த்துக் கொண்டே கேட்டாள்... ''அப்படி வாரினாத்தாம்மா வகிட்டுப் பொட்டு அழகா வைக்க முடியும்!''

வசு ஊமையாகத் தலையாட்டினாள்.

*****

திருமணத்துக்குப் பின் முதல் சம்பளம்!



மாமியாருக்கு ஏதாவது வாங்கலாம் என்று தோன்றியது.

பேக்டரிக்கு வெளியே வரும்போது, கேட்டுக்கு அருகில் அப்பா...,

''என்னப்பா இங்க?''

பதில் பேசாமல் மௌனமாக நின்றார் அப்பா...

அவளுக்குத் தெரியும்... பணப் பிரச்னை தான்... தனியொரு மனிதனாக ஏறத்தாழ எழுபதாயிரம் ரூபாய் செலவழித்து, இன்று அரை வயிற்றுக் கஞ்சிக்குக் கூட இல்லாமல் அவதிப்படும் அப்பா...

சொல்ல வெட்கப்பட்டு, மௌனமாக நிற்கும் அப்பா...

இரண்டு நூறு ரூபாய் தாள்களை சரக்கென உருவி அவரிடம் தந்தாள்... ''இப்ப இதை வச்சுக்குங்கோப்பா... என்னால முடிஞ்சது இதுதான்...''

கண்கள் தளும்பியது அவருக்கு...

போகும் வழியில் கடையில் ஏறி மாமியாருக்கு நல்லதாக ஒரு புடவையும், கொஞ்சம் பழங்களும் வாங்கிக் கொண்டாள்.

உள்ளே நுழையும் போது ஹாலில் அம்மாவும் பிள்ளையும்...

''என்ன வசு லேட்டு இன்னிக்கு?'' ராம்.

''பேமெண்ட்... அதான்.''

புடவையை எடுத்துக் கொண்டு மாமியாரை நெருங்கினாள். ''அம்மா உங்களை நமஸ்காரம் பண்றேன்..., இந்தாங்கோ...''

வாங்கிக் கொண்ட மாமியார் மலர்ந்து போவாள் என்று எதிர்பார்த்து ஏமாந்தாள்...

''என்ன விலை இதுக்கு?''

''நூத்தம்பதும்மா...''

''எங்கிட்ட ஏகப்பட்ட புடவை இருக்கு. இப்ப எதுக்கு அனாவசியமா? ஒரு வார்த்தை எங்கிட்ட நீ கேட்டிருக்கலாம்!''

''அதானே!'' — ஜால்ரா.

''சரி போகட்டும்... போய் டிரஸ் மாத்திண்டு வந்து காப்பியைக் குடி....''

அடிபட்டுப் போனாள் வசுமதி...'என்ன மனுஷி இவ? பாசத்தைப் புரிஞ்சுக்கத் தெரியாத ஜன்மம்...? நிறையப் புடவை உனக்கு இருக்கலாம்... நேசத்தோடு தரப்பட்ட இந்தப் புடவைல உள்ள நெருக்கம் எப்படி தெரியாமப் போச்சு ஒனக்கு?'

'அதானே!' ஜால்ரா தட்டும் கணவனை அறையத் தோன்றியது...

சற்று நேரத்தில் சம்பளத்தை எடுத்து ராமிடம் கொடுத்தாள்...

''எங்கிட்ட எதுக்கு? அம்மாகிட்ட குடு... வீட்டு நிர்வாகமே இங்க அம்மாதானே!''

கொடுத்தாள்...

''ஒனக்கு என்ன சம்பளம் வசு?''

''ஆயிரத்துக்கு மேலம்மா...''

''சரியாச் சொல்லு!'' — ராம்...

''ஆயிரத்து எழுபத்தஞ்சு ரூபா... எம்பத்தேழு பைசா'' — எரிச்சலுடன் சொன்னாள்.

கொடுத்த பணத்தை எண்ணிப் பார்த்த மாமியார், ''கிட்டத்தட்ட நானூறு ரூபா குறையறதே! நூத்தம்பது புடவைக்கு... சரி!''

''அம்பது ரூபா வரைக்கும் எங்கிட்ட இருக்கும்மா...''

''சரி... மீதி இருநூறு...?''

''அப்பா பேக்டரிக்கு வந்திருந்தார், அவருக்குக் கொடுத்தேன்!''

சட்டென்று முகம் மாறிப் போனது மாமியாருக்கு.

''எதுக்கு அப்பாக்குக் குடுத்த?'' — ராம்.

''இதென்ன கேள்வி? அவருக்கு ஏகப்பட்ட கஷ்டம், ஏராளமான பிரச்னைகள், குடுத்தேன்...''

''அம்மாகிட்ட சொல்லல... எங்கிட்ட சொல்லல...''

''அதான் இப்ப சொல்லிட்டேனே!''

''வசு... இத பாரம்மா... சம்பாதிக்கறது நீயா இருக்கலாம், பணமும் உன் பணமா இருக்கலாம்... ஆனா நீ இப்ப தனி மனுஷி இல்லை... இன்னொரு வீட்டுப் பொண்ணு... தாலி சுமக்கறவ... உனக்குன்னு சில தார்மீகப் பொறுப்புகள் உண்டு... புருஷன் வீட்ல கேக்காம எதையும் நீ செய்யக் கூடாது!''

''சரிம்மா, நா செஞ்சது — கேக்காம செஞ்சது — தப்புனே இருக்கட்டும்... ஆனா எனக்குன்னு சில உரிமைகள் கூடவா இல்லை?''

''சொல்லு எது உரிமை? உங்கப்பாவுக்குப் பணம் கொடுக்கறதா?'' — ராம்.

''கண்டிப்பா அது உரிமைதான்...''

''நோ... இதை நாங்க ஒப்புக்கலை. ஒன்னைக் கல்யாணம் செஞ்சு குடுத்தது அவரோட கடமை...''

''இல்லேன்னு நான் சொல்லலே... அதுனாலே அவர் ஏகப்பட்ட கடன்ல சிக்கிண்டு சீரழியறார்...''

''அது விதி... அவர்தான் அனுபவிக்கணும்...''

''நோ... நா பெத்த பொண்ணு இருக்கறச்சே, அவருக்கு அந்தக் கஷ்டம் தேவையில்லை... ஏதோ என்னாலான சின்ன உதவி... இது மனிதாபிமானம்...''

''எங்கம்மாவோட அனுமதி கேட்டிருக்கணும் நீ!''





பத்மபூஷண் சங்கீத கலாநிதி டாக்டர் செம்மங்குடி ஸ்ரீ ஸ்ரீநிவாசய்யர் அவர்களின் பௌத்திரனும், பம்பாய் நிர்லான் ஸிந்தடிக் ஃபைபர் நிறுவனத்தைச் சேர்ந்த ஸ்ரீ சுவாமிநாதனின் புத்திரனுமாகிய சிரஞ்சீவி ஜெயராமனுக்கும், ஸ்ரீ M. R.ராமகிருஷ்ணன் (Mangalore Chemicals & Fertilizers Ltd, New Delhi) அவர்கள் புத்திரி சௌபாக்கியவதி உமாவுக்கும் சமீபத்தில் பம்பாய் வடாலாவில் விவாஹம் வெகு சிறப்பாக நடந்தேறியது.

**வாழ்க மணமக்கள்**



கதிராமங்கலம் ஸ்ரீ K.V நடராஜ ஐயர் அவர்களின் குமாரன் சிரஞ்சீவி ராமகிருஷ்ணனுக்கும் சென்னை இராஜா அண்ணாமலைபுரம் ஸ்ரீ எஸ். இராமச்சந்திர ஐயர் அவர்களின் பௌத்திரியும், ஸ்ரீ ஆர். பாலசுப்பிரமணியம் அவர்களின் புத்திரியுமான சௌபாக்கியவதி இராஜேஸ்வரிக்கும் சென்னையில் சமீபத்தில் விவாஹம் வெகு சிறப்பாக நடைபெற்றது.

**வாழ்க மணமக்கள்**



''காஞ்சிபுரம் இட்லி என்ன விலை?''
''சின்ன காஞ்சிபுரம் இட்லி 50 காசு. பெரிய காஞ்சிபுரம் இட்லி 75 காசு. எது வேணும்?''

''என்ன கொலை பாதகம் இது? பெத்த தகப்பனுக்கு — கேவலம் ஒரு இருநூறு ரூபாய் — குடுத்ததுக்கு கோர்ட்டுல கேக்கற மாதிரி ஆயிரம் கேள்வி... உலக மகா பாதகமா இது? அப்பாக்கு நாலு காசு கொடுக்க இன்னும் யார் யாரை நான் கேக்கணும்?''

பளீரென்று அறைந்தான் ராம்...

''அடிங்கோ... அதுல உரிமை உங்களுக்கு உண்டு... ஆனா ஒண்ணு புரியணும் உங்களுக்கு... உங்களை ஆளாக்க உங்கம்மா எவ்வளவு கஷ்டப்பட்டாளோ? அதே அளவு கஷ்டம் என்னை உருவாக்க எங்கப்பாவும் பட்டிருக்கார்... பாசம் ஆணுக்கும், பெண்ணுக்கும் ஒண்ணுதான்... எடத்துக்கு எடம் மாறுது...

''நிறுத்துடி... இனிமே பேசினா...''

''நிறுத்திட்டேன்... நா இந்த வீட்ல மனைவி இல்லை ஆயுள் கைதின்னு தெரிஞ்சு போச்சு...'' அழுதுகொண்டே உள்ளே போனாள்...

''ஏம்மா, வேலைக்குப் போறதாலதானே இவ்ளோ வாய்? அதை நிறுத்திட்டா என்ன செய்வா இவ? எப்படிக் கொடுப்பா அவ அப்பாவுக்கு?'' ராம் மனிதத் தன்மையை இழந்து ரொம்பவும் கீழான நிலைக்கு இறங்கிக் கொண்டிருந்தான்...

''வேணும்டா... சொளையா ஆயிரம் ரூபா... சுசக்கவா செய்யும்? குடும்பத்துல ஆயிரம் செலவு... எவன் தருவான் இவ்ளோ பணம்? உன்னோட தங்கைக்கு நெக்லஸ் வாங்கணும்னு பிளான் பண்ணியிருக்கேன்... சேர்க்க வேணுமா நாலு காசு? துள்ளினா அடக்கு... கடிவாளம் போடு... கட்டிண்டாச்சு... இனிமே அறுத்துட்டா போக முடியும்? ஆம்பளைதானே நீ?''

ராம் பிடரியை சிலிர்த்துக் கொண்டான்.

*****

''என்னம்மா திமர்னு? மாப்ளை வரலியா?''

''இல்லப்பா... நா அரை நாள் லீவு போட்டுட்டு வந்தேன்... மனசு சரியில்லைப்பா..''

''ஏம்மா? மாப்ளை கோச்சுண்டாரா? தங்கமான பிள்ளையாச்சே!''

''தங்கம்தான்... தட்டி அம்மாவோட கழுத்துல தொங்க விட வேண்டியதுதான்...''

''வசு, நீ என்ன சொல்றே?''

சொன்னாள்... நடந்தது அத்தனையும் ஒரு வரி விடாமல் சொல்லி முடித்தாள்...

அப்பா அசையாமல் இருந்தார்...

''என்னப்பா பேசலை?''

''தப்பு எங்கிட்டதாம்மா.... நா வந்து நிக்கலைன்னா நீ பேசாம போயிருப்ப இல்லையா?''

''இல்லைப்பா... ஒங்களுக்குன்னு ஒரு தொகை கண்டிப்பா ஒதுக்கியிருப்பேன்... அது என் கடமை... ஏம்பா, என்னைப் படிக்க வச்சு, இவ்ளோ செலவு பண்ணி கட்டிக் குடுத்து... எனக்கு மட்டும் கடமையில்லையா? இதென்ன உலக நியாயம்னு எனக்குப் புரியலை... அத்தனையும் கல்யாணத்துல வாங்கி முழுங்கினது பத்தாதுன்னு இப்ப என் சம்பளம்...''

''தப்பும்மா வசு...''

''இல்லப்பா... ஒரு சின்ன விஷயத்தை, நியாயமான விஷயத்தை பெரிசு படுத்தற அந்த வீட்ல நா எப்படீப்பா வாழ முடியும்? நானும் ஒரு மனுஷிதாம்பா...''

''அதுனாலதாம்மா கஷ்டம்... பெண்ணுக்குப் பேசற உரிமை பூரணமா இங்க கிடைலம்மா... பேசாம இருக்கற வரைக்கும் தான் அவளுக்கு மரியாதை நம்ம சமூகத்துல!''

''எனக்கு அங்க சுதந்திரம் இல்லைப்பா...''

''சுதந்திரமும், தாலியுமா சேர்த்து நிறையப் பெண்களுக்குக் கிடைக்கிறதில்லைம்மா.. ஏதாவது ஒண்ணுதான் கிடைக்கும்,... சமாளிச்சுக்கோ...''

ஒடிந்து போய் நடந்தாள் வசு.

நியாயம்தானா? பேசாமல் வாழ்பவள் தான் பெண்ணாக இருக்க முடியுமோ?

நிஜத்துக்கும், நேசத்துக்கும் இங்கே இடமில்லையா?

வீட்டுக்குள் நுழையும்போது, பழைய வசுமதி இறந்திருந்தாள்...சூடு தணிந்து சாம்பலாகிப் போயிருந்தாள்...

இனி என்ன?

வசுமதியைப் பற்றிச் சொல்ல இங்கே எதுவுமில்லை...

ராமின் மனைவி...

சம்பாதித்தாள்...

கணவனின் ஆசைக்கு இணங்கினாள்...

பூச்சூடி, சீமந்தம் நடத்தி,

இடுப்பு வலி எடுத்து... பிள்ளை பெற்று...

மறுபடியும் வேலைக்குப் போய்—

இன்னும் எத்தனை வசுமதிகள் நம்மிடையே மரிக்கப் போகிறார்கள்? சாம்பல்களைப் பூசிக் கொண்டு எத்தனை ராம்கள் பெண் பெருமை பேசிக் காலம் கழிக்கப் போகிறார்கள்?

வசுமதியின் பிள்ளை அவளை விட்டு அங்குலம் கூட நகர்வதில்லை...

இதோ... மற்றொரு ராம்!

# ஒரு புரளி பொய்யாகிறது!

தமிழில் வாழ்க்கையோடு ஒட்டியதாக இயல்பான நாடகங்கள் வருவதில்லை; அப்படியே வந்தாலும் ரசிகர்கள் அதை ஏற்றுக் கொள்வதில்லை என்ற புரளியை பொய்யாக்கி விடுகிறது ''அப்பா, ஒரு அப்பாவி!''

நகைச்சுவை நாடகமென்றால் ஜோக் தோரணம் கட்டித் தொங்க வேண்டும், அல்லது ஆபாசமான இரட்டை அர்த்த வசனங்கள்தான் விலை போகும் என்ற மாயையை உடைத்தெறிந்து மிருதுவான ஹாஸ்யத்தைக் கொடுத்து மன மகிழச் செய்து வருகிறது, ''அப்பா, ஒரு அப்பாவி!''

நாடகத்தை மட்டுமின்றி, அவையினர் அதனை ரசிக்கிற விதத்தையும் கூர்ந்து கவனித்து வந்தேன், நான். தொடக்கத்தில் கேலிச் சிரிப்பும் கிண்டலுமாக ஓரிருவர் நாடகத்தை ரசிப்பதில்லை என்ற தீர்மானத்தோடு வந்திருப்பதுபோல் தோன்றியது. அவர்களும் கூட ஒரு சில காட்சிகளுக்குப் பிறகு, தங்களை இழந்து நாடகத்துடன் ஒன்றி விட்டனர் என்பது சரியான இடங்களில் அளவான சிரிப்பொலி, கரகோஷத்தின் மூலம் புரிந்தது.

நாடகத்தின் மையக்கருத்து, தலைமுறை இடைவெளி. சம்பிரதாயத்தில் ஊறிய குடும்பத் தலைவன்; நவீன சிந்தனை உள்ள இளைஞர்கள், யுவதிகள்;— இவர்களிடையே ஏற்படும் உரசல்கள். குடும்பத் தலைவன் கண்டிப்பு கறாராக இருக்கிறார் என்றால் இளைஞர்களோ தங்கள் போக்கை நியாயப்படுத்தும் விதமும் நம்மைக் கவர்ந்துவிடுகிறது. 'அட, இரு பக்கமும் நியாயம் இருக்கிறதே, யாரைக் குறை கூற முடியும்?' என்று தோன்றுகிறது.

இந்த டென்ஷன் வளர்ந்து கொண்டே போய் முடிவில் ஓர் இயல்பான ஹாஸ்யமான திருப்பம் ஏற்பட்டு ஒருவரை ஒருவர் பெருமிதத்துடன் மதிக்கின்ற இடம் மெய்சிலிர்ப்பை ஏற்படுத்துகிறது.

அதே அளவு மதிப்பும் பெருமிதமும் நமக்கு நாடகாசிரியர் மெரீனாவிடம் ஏற்படுகிறது. நாடகத்தனமான வாழ்க்கையைக் காட்டாமல் வாழ்க்கையை நாடகமாக்கிய அவரை வாழ்த்துகிறோம்.

பிரதான பாத்திரமாகிய அப்பாவாக ஜெமினி மகாலிங்கம் நடித்தபோது எனக்கு வி. ஸி. கோபாலரத்தினம் அவர்கள் நினைவு வந்தது. இது மிகப் பெரிய பாராட்டு என்பதை ஐம்பது வயதுக்கு மேற்பட்ட சென்னைவாசிகள் நன்கு உணர்வார்கள். மற்ற நடிகர்கள் சூரியனை நியதி தவறாமல் சுற்றி வரும் கிரகங்களைப் போல் தங்கள் பணிகளைச் செவ்வனே செய்திருக்கிறார்கள்.

நடிப்பு, டைரக்ஷன், ஸீன்—ஸெட்டிங் எல்லாமே கச்சிதம்.

நல்ல விஷயத்தை நல்ல விதமாகக் கொடுத்தால் ரசிகர்கள் ஏற்பார்க்ள்; நமது கையாலாகாத்தனத்துக்கு ரசிகர்கள் மீது பழி சுமத்துவதில் அர்த்தமேயில்லை என்பதை நிரூபித்துள்ள பல நாடகங்களுள் ஒன்று 'ரசிகரங்கா'வின் ''அப்பா, ஒரு அப்பாவி!''

— குட்டி கிருஷ்ணன்



மன்மோஹன் ஸிங் கண்ணாடியில் தன் உருவத்தைப் பார்த்துக்கொண்டான். மூன்று இரவுகளாகத் தூக்கம் இல்லாததால் கண்களில் ஒரு சிவப்பும் பளபளப்பும் தெரிந்தன. காரணம் வெளிப்படாமல், வார்த்தைகளில் வெடிக்காமல் அடிக்கடி அவன் கண்கள் திடீரென்று பனித்தன. உருகி நீராய் வடிந்தன. அடிவயிற்றில் துயரமா பயமா என்று புரியாத ஓர் உணர்வுக் கலவை கனன்ற வண்ணம் இருந்தது.

அவனுடைய பெற்றோர்கள் பயத்தின் எல்லையைத் தொட்டுவிட்டார்கள். அவர்கள் மாத்திரம் இல்லை — எல்லாச் சீக்கியர்களும் மரண பயத்தின் எல்லையில் நிற்கிறார்கள்.

உள்ளங்கையில் ஜனித்த கோபத்தை





அவன் விரல்களால் மூடி அமுக்கினுன். தொண்டையிலிருந்து வெளிவரப் பார்த்த வார்த்தைகளைப் பற்களால் நொறுக்கி மூடிஞன்!

**'Ask not for whom the bell tolls. It tolls for thee.'**

(யாருக்காகச் சாவு மணி அடிக்கிறது என்று கேட்காதே. அது உனக்காகத்தான் அடிக்கிறது.)

அமுக்க முயன்றும் அமுக்கப்படாமல் எப்பொழுதோ பள்ளியில் படித்த இந்த வாக்கியம் திரும்பத் திரும்ப மனத்தில் மோதியது.

''அண்ணு! இந்தா நீ கேட்ட கத்தரிக்கோல்!''

அவன் சட்டென்று சுயநினைவு வந்து குனிந்து பார்த்தான்.

அவர்களுக்குப் பாதுகாப்பு அளித்திருந்த ஹிந்துக் குடும்பத்தின் கடைசிப் பையன் ராஜு நின்றிருந்தான்.

''தாங்க்யூ!'' என்று புன்னகை செய்தபடி மன்மோஹன் அவன் கையிலிருந்த கத்தரிக்கோலை வாங்கிக் கொண்டான். தன் டர்பனை அவிழ்த்துக்கீழே வைத்தான். இதுவரை வெட்டாத தலைமுடி உச்சந்தலையில் சுருண்டு கட்டப்பட்டிருந்ததை அவிழ்த்தான்.

ராஜீவின் முகத்தில் ஆர்வமும் சிரிப்பும் தெரிந்தன.

''எவ்வளவு நீள முடி உனக்குப் பெண்கள் மாதிரி! என்ன செய்யப் போறே?''



''வெட்டிடப் போறேன்!''

''ஏன்?''

தீவிரமாகக் கண்ணுடியில் உருவத்தைப் பார்த்துக் கொண்டு முடியை மன்மோஹன் வெட்ட ஆரம்பித்தான். இடையில் மெல்லிய குரலில் சொன்னுன்.

''அப்பத்தான் நான் தைரியமா வெளியிலே போகலாம்!''

ஓரளவுக்குவிஷயத்தைப்புரிந்துகொண்ட மௌனத்துடன் ராஜு நின்ருன். மன்மோஹனின் தலைமுடி கீழே பரப்பியிருந்த செய்தித்தாளில் கொத்துக் கொத்தாக விழுவதைச் சற்று நேரம் வேடிக்கை பார்த்துவிட்டுக் கேட்டான்:

''எல்லா சர்தார்ஜிகளும் ஏன் இப்படிச் செய்யல்லே? எத்தனையோ பேர் உயிர் தப்பியிருக்கலாமே?''

''சிலபேர்களுக்குச் சிலவிஷயங்கள் அதிக முக்கியம் ராஜு! பல பேருக்கு யோசிக்க நேரமும் கிடைக்கல்லே. நீங்கள் எங்களுக்கு இடம் கொடுத்ததாலே தப்பிச்சேன்! இல்லையானல் என்னையும்...!''

''போதும், போதும். மேலே சொல்லாதே.'' என்று ராஜு இடைமறித்தான் அவசரமாக. தலைமுடி அடர்த்தியாக இருந்தது. கத்தரிக்கோல் வழுக்கிக்கொண்டு வெட்டிற்று. கிட்டத்தட்ட முடிவெட்டி முடிந்த நிலையில் தன் உருவத்தைப் பார்த்துக் கொள்ள அவனுக்கு வேடிக்கையாக இருந்தது. உள் அறையில் பதுங்கியிருக்கும் அம்மா அப்பாவின் எதிரில் போய் நின்ருல் அவர்களுடைய அதிர்ச்சி எப்படியிருக்கும் என்று அவன் விஞடிக் கற்பனையில் தயங்கி மறுபடி வேலையைத் தொடர்ந்தான்.

'அதிர்ச்சி அடைய இனிமேல் ஏதுமில்லே' என்று அவன் தனக்குள் சொல்லிக் கொண்டான். 'அதிர்ச்சியின் எல்லையைக் கடந்துவிட்ட நிலை வந்துவிட்டது!

''அவர்கள் ஏன் கொன்ருர்கள் அண்ணு?''

அவன் திடுக்கிட்டு ராஜுவைப் பார்த்தான்.

''யாரை?''

''இந்திரா காந்தியை?''

இந்தப் பொடியன் நம்மை ஆழம் பார்க்கிருனே என்று மெல்லிய திகைப்பு ஏற்பட்டது.

''ஆ, அவர்களுக்கு ஏதோ கிறுக்குப் பிடித்திருக்க வேண்டும். முட்டாள்கள்!''

''ரொம்ப தப்பான காரியம் இல்லே?''

''ரொம்ப!''

ராஜு தயக்கத்துடன் அவன் முடிவெட்டுவதையே பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான். ரொம்பவும் யோசித்துக் கேட்பவனைப் போல் கேட்டான்:

''உங்களுக்கு வருத்தமா இந்திராகாந்தியைச் சுட்டது?''

''பின்னே? வருத்தம், கோபம், துக்கம், இன்னும் எவ்வளவோ! எதுக்குக் கேக்கிறே?''

''சில சர்தார்ஜிகளுக்கு சந்தோஷமாம்!

ஸ்வீட் வினியோகிக்கிறார்களாம்! பங்க்ரா டான்ஸ் கூட ஆடினார்களாம்!''

கத்தரிக்கோலைப் பிடித்திருந்த கை சில வினாடிகள் அசையாமல் நின்றது. அந்த இளகு முகத்தில் தெரிந்த ஆர்வத்தையும் சந்தேகத்தையும் கண்டு மெல்லிய துக்கம் ஏற்பட்டது.

''இருக்கலாம்!'' என்றான் அவன் பட்டுக் கொள்ளாமல். ''முட்டாள்கள்தான் உலகத்தில் அதிகம் ராஜு!''

ராஜு புன்னகை புரிந்தான்.

''நீ புத்திசாலியா?''

தாடியை ஒட்ட ''ட்ரிம்'' செய்தபடி மன்மோஹன் சொன்னான்.

''தெரியாது. ஆனால் முட்டாள் இல்லை என்று நினைக்கிறேன்.''

எட்ட நின்று அவனைக் கவனித்த ராஜு, ''முடியை வெட்டினப்புறம் நிஜம்மாவே ஸ்மார்ட்டா தெரியறே. யூ லுக் ஹாண்ட்ஸம்!'' என்றான்.

''தாங்க்யூ'' என்று முணுமுணுத்து பேப்பரில் விழுந்திருந்த மயிர்க் கற்றைகளை ஜாக்கிரதையாக மடித்துச் சுருட்டிக் குப்பைக் கூடையில் போட்டு முகத்தைக் கழுவிக் கண்ணாடியில் பார்த்துக் கொண்ட போது புதிய பிறவி எடுத்துக் கொண்ட பிரமையேற்பட்டது. தினமும் பகடி கட்டிக் கொண்டதற்கான அடையாளம் நெற்றியில் வெள்ளைக் கோடாகத் தெரிந்தது.

'அது மறைந்து போகும் இரண்டே நாட்களில்' என்று அவன் தனக்குள் சொல்லிக் கொண்டான். 'ஞாபகங்களும் அனுபவங்களும் மறையா விட்டாலும்! இனி ஆயுசு வரைக்கும் தொடரப் போகும் ஞாபகங்கள்... முடியை வெட்டி எறிந்தாலும் என் பிறவியைச் சுட்டிக் காட்டப் போகும் நினைவுகள்.'

'ஏன் கொன்றார்கள்?'

ராஜுவின் இந்தக் கேள்விக்கு என்ன பதில் சொல்வது?

இதற்கான சரித்திர காரணங்களை விளக்கினால் சமாதானமாகக் கூடிய விஷயமா இது? தொழிலுக்குத் துரோகம் செய்யத் துணிந்தவனை பாமரனும் மன்னிப்பானா?

* * * * *

அவனுடைய உறவுக்காரர்களில் இந்த இரண்டு நாட்களில் நான்கு பேர்கள் கொல்லப்பட்டிருக்கிறார்கள். இருவரின் வீடு கொள்ளையடிக்கப்பட்டு, தாடிகள் மழிக்கப்பட்டு, பக்கத்து வீட்டவர்கள் வந்து தடுத்திருக்காவிட்டால் பரலோகம் போயிருப்பார்கள்.

செய்திகள் வரவர அம்மாவும் அப்பாவும் புலம்பக் கூடச் சக்தியற்று வாயடைத்துப் போய் விட்டார்கள். அந்தக் காலனியை நோக்கி ஒரு கொலைகாரக் கூட்டம் வருகிறது என்று கேள்விப்பட்டு பக்கத்து வீட்டுக்காரர், ராஜுவின் அப்பா, அவர்களைக் கட்டாயப்படுத்தித் தன் வீட்டிற்கு அழைத்த போது ஆட்டுக் குட்டிகளைப் போல அவர்கள் கிளம்பியதும், அவர்களுடன் தானும் கிளம்பி வந்ததையும் நினைக்க நினைக்க ஓர் இனம்புரியாத பீதியும் அவமானமும் ஏற்பட்டன.

இனிமேல் தைரியமாக, முன்பிருந்த சரளத்துடன், சௌஜன்யத்துடன் இங்கு எல்லாருடனும் ஒன்றி வாழ முடியுமா? பீதியைக் கிளப்பிப் பாடம் கற்பிக்கும் மும்முரத்தில் இன்னும் சுவர்களை அல்லவா எழுப்பிக் கொண்டிருக்கிறார்கள்? சீக்கியப் பயங்கரவாதிகளுடன் கொஞ்சங்கூடச் சம்பந்தம் இல்லாத பாமரர்களை வதைப்பதன் மூலம் யாருக்கு இந்தப் பாடம்? பயங்கரவாதிகள் உணர்ந்து கொள்வார்களா?

அவன் ஆயாசத்துடன் தலையை உலுக்கிக் கொண்டான்.

மன்மோஹன் ஸிங் மறுபடி தன் உருவத்தைக் கண்ணாடியில் பார்த்துக் கொண்டு அம்மாவும் அப்பாவும் இருந்த அறைக்குச் சென்றான். அவன் உள்ளே நுழைந்ததும் அம்மா அவனைத் திகைத்துப் போய்ப் பார்த்தாள்.

''மன்மோஹன், என்ன செய்து விட்டே?'' வாக்கியம் முடிவதற்குள் தொண்டையை அடைத்துக் கண்களில் நீர் படர்ந்தது.

''என் உயிர் எனக்கு முக்கியம் அம்மா!'' என்றான் அவன் வறண்ட குரலில்.

அவன் சொல்வதை ஆமோதிப்பதைப் போல அப்பா வாய் பேசாமல் தலையை ஆட்டினார். அம்மா ஓசைப்படுத்தாமல் அழுதாள்.

''இன்னும் என்னவெல்லாம் அனுபவிக்க வேண்டுமோ!''

குலுங்கும் அவள் தோளை அவன் மென்மையாகப் பற்றினான்.

''மனுஷ தர்மம் ஒண்ணுதான் முக்கியம். வேறு எந்த தர்மமும் முக்கியமில்லை! உன் மாமாவைப் போய்க் கேள். அவருடைய இரண்டு பிள்ளைகள் இறந்து விட்டார்கள். அவர் சொல்வார் எது முக்கியம் என்று!''

அவள் தலையில் அடித்துக் கொண்டு அழுதாள்.

''கொலைகாரர்கள்! வெறிபிடித்தவர்கள்! நாமெல்லாம் என்ன தப்பு பண்ணினோம்? குற்றமில்லாதவர்களை ஏன் வதைக்கிறார்கள்?''

மன்மோஹன் சற்று நேரம் பேசாமல் இருந்தான்.

அலுப்புடன், ''ஹிந்துக்களைப் பஞ்சாபில் கொன்றது நம் இனத்தைச் சேர்ந்த பயங்கரவாதிகள். அதற்காக நீ வெட்கப்படேன்! பாதுகாக்கிறேன் என்று சத்தியப் பிரமாணம் எடுத்தவன் உயிரைப் பறிச்சிருக்கான், உன் மதத்தின் பெயரிலே! அதற்கு வருத்தப்படேன்!''

அம்மா இப்பொழுது வாய்விட்டு அழுதாள்.

''இதெல்லாம் நியாயமாப் படுகிறதா, உனக்கு?''

''நிச்சயம் இல்லே. இந்த மாதிரி சந்தர்ப்பங்களை உபயோகித்துக் கொள்ளக் கூட்டங்கள் பல பெயர்களில் தயாராக இருக்கிறது. உலகத்து எல்லா இடங்களிலும் உண்டு. நாம்

ஏன் அப்படிப்பட்ட சந்தர்ப்பங்களைக் கொடுக்க வேண்டும்?''

அம்மா அழுது கொண்டே தலையைப் பலமாக அசைத்தாள்.

''உன் அக்கா லண்டனுக்கு வந்துவிடுங்கள் என்று சொல்லிக் கொண்டேயிருக்கிறாள். அங்கு போய்விடுவோம். இங்கு நமக்கு இனிமேல் என்ன இருக்கிறது?

*****

தினசரிப் பத்திரிகைகள் என்னவெல்லாமோ செய்திகள் தந்தன. நம்ப முடியாத பயங்கரத் தகவல்களைத் தந்தன. அதில் ஓரளவுக்கேனும் உண்மை இருந்ததற்கு அவனுடைய உறவினர்களின் மரணச் செய்தி நிரூபணம்...

ஒரு வெறியர் கூட்டத்தின் கோழைச் செயலால் ஒரு சமூகத்திற்குக் கிடைத்திருக்கும் தண்டனை. இனிமேல் நீ வாலை எப்படி ஆட்டுவாய் பார்ப்போம் என்கிற ஆக்ரோஷ எதிர்ப்பு. அந்தச் செயலில் உனக்குச் சம்பந்தம் இருக்கிறதோ, இல்லையோ, 'வாங்கிக் கொள் இந்த அடியை' என்கிற சாட்டை அடி.

அவன் யோசனையுடன் அம்மாவையும் அப்பாவையும் பார்த்தான்.

தூய்மையான சீக்கியர்கள், பக்தி மார்க்கமே சிறந்த மார்க்கம் என்று நம்புபவர்கள், மதக் கோட்பாடுகளை மீறத் துணியாதவர்கள். அவர்கள் மனத்தைப் புண்படுத்தக் கூடாது என்கிற ஒரே காரணத்தால்தான், கொள்கைகள் மாறுபட்டாலும், தோற்றத்தை மாற்றாமல் இதுவரை அவன் இருந்திருக்கிறான்.

திடீரென்று அவர்களை நினைத்து அவனுக்கு மிகமிகப் பரிதாபம் ஏற்பட்டது. ஹிந்து, சீக் என்கிற வித்தியாசமே நினைத்திராத இவர்கள் மனசில் இப்பொழுது நிரந்தர வித்தியாசம் ஏற்படப் போகிறது- என்று துயரமேற்பட்டது. அவன் வெகுநேரச் சிந்தனைக்குப் பிறகு எழுந்தான்.

''நான் கொஞ்சம் வெளியில் போயிட்டு வர்றேன்!'' என்றான்.

அம்மா கலவரத்துடன் நிமிர்ந்து பார்த்தாள்.

''வேண்டாம் ம ன் மோ ஹ ன்! போகாதே!'' என்றாள். ''உன்னை அடையாளங் கண்டு கொள்வார்கள்!''

''ஒன்றும் ஆகாது. கவலைப்படாதே'' என்றான் அவன். ''என்னால் வீட்டிற்குள் அடைந்து கிடக்க முடியாது. அதனால்தான் முடியை வெட்டிக் கொண்டேன். எனக்கும் ஹிந்துவுக்கும் இப்பொழுது எந்த வித்தியாசமும் இல்லை.''

''என்றைக்குமே இல்லை மகனே!'' என்றார் அப்பா மெல்லிய குரலில். ''அதை இந்த முட்டாள்களுக்கு யார் சொல்வார்கள்?''

இன்றைக்கு அப்பாவின் வார்த்தைகள் உள்ளே பிரவாகத்தைக் கிளப்பின. அவன் அவர் தோளைச் சிநேகிதமாகத் தட்டி, ''கவலைப்படாதீர்கள். நான் ஆபத்தில் மாட்டிக் கொள்ள மாட்டேன்'' என்று கிளம்பினான்.

''அவனைப் போக விடாதீர்கள்!'' என்று அம்மா உள்ளே கத்தினாள். அப்பாவிடமிருந்து பதில் வரவில்லை.

வெறிச்சிட்ட தெருவில் காலை வைத்ததும் திடீரென்று நிர்வாணமாய் நிற்பதுபோல் அவனுள் ஒரு பலவீனம் ஏற்பட்டது.

(தொடரும்)



**அவள் சுமங்கலிதான்**



# பிரமிக்க வைக்கிறார் விசு

''முருகனைப் பத்திப் பாடின வரைக்கும் போறும்டி. நமக்கு என்ன வேணுங்கறதைக் கேளு'' என்று, விசு, கே. ஆர். விஜயாவைத் தூண்டிவிடும் ஆரம்பக் காட்சியைச் சொல்லலாமா?

'மாப்பிள்ளை கூலிங் கிளாஸைக் கழட்டாமலேயே இருக்காரே. அவருக்கு கண்ல ஏதாவது கோளாறு இருக்குமோ?' என்று கே. ஆர். விஜயா சந்தேகப்பட, கார்த்திக் ஷூவைக் கழற்றாமலேயே சமையலறைக்குள் வந்து கண்ணைப் பிதுக்கிக் காட்டி, கழுத்தை வளைத்துக் காண்பித்து, போதாததற்கு ஒரு குட்டிக்கரணமும் போட்டு உடம்பில் எந்தக் கோளாறும் இல்லை என்று பிரகடனம் செய்யும் காட்சியைச் சொல்லலாமா?

''இனிமே 42 ரூபாப் புடவையை எடுத்துக்கிட்டு இந்த வீட்டுக்கு வராதேம்மா. முடிஞ்சா 84 ரூபாய்க்கு ரெண்டு புடவையா வாங்கிட்டு வா'' என்று இளவரசி கணவனின் உடன் பிறவாத் தங்கைக்காக பாசம் பொழியும் இடத்தைச் சொல்லலாமா?

''ஜண்ட் ஒரு செக்கப் பண்ணிடுங்க'' என்று மாப்பிள்ளை உடம்பைச் சோதனை செய்யச் சொல்கிறார் விசு. சோதனை செய்து பார்த்து டாக்டர் அரண்டு போய் கார்த்திக்கின் நண்பர் சந்திரசேகரைத் தேடிப் பிடித்து, விஷயத்தை வெடிகுண்டாய் வெடிக்க, விஷயம் கார்த்திக்கிற்கும் தெரியவராமல் இருக்க, சந்திரசேகர் 'என்னடா பெரிய ஃப்ரெண்ட்ஷிப்? செத்தா ரெண்டு பேரையும் ஒரே சவப்பெட்டில வப்பாங்களாடா?' என்று பொருமும் கட்டத்தைச் சொல்லலாமா?

பார்வை போன நேரத்தில் பயந்து போய், 'சூரியகோஸ்! எனக்கு கண்ணு தெரியலேடா' என்று பொங்கிப் பொங்கி கார்த்திக் தூள் கிளப்புகிறாரே. அந்த நடிப்பைச் சொல்லலாமா?

தான் செத்த பிறகு மனைவி படிக்கட்டும் என்று எழுதிய கடைசிக் கடிதம், அவர் உயிரோடு இருக்கும்போதே, கண்ணெதிரிலேயே (பார்வையில்லாத நேரத்தில்) அவளுக்காக தீபாவளிப் பரிசாக எடுத்துச் செல்லப்படுவது அறியாமல் கார்த்திக் தலையசைக்கும் நேரம் நெஞ்சில் பதைப்பும், பரிதாபமும் பொங்குவதைச் சொல்லலாமா?

எதைச் சொல்வது, எதை விடுவது?

நகைச்சுவை, ஊடே அழுத்தமான முடிச்சுள்ள கதை, மனத்தை ஆக்கிரமிக்கும் பாத்திரங்கள், கடைசியில் நெஞ்சைச் சுடும் சோகம் — எல்லாவற்றிற்கும் அஸ்திவாரமாய் கருத்தான வசனங்கள் — விசு பிரமிக்க வைக்கிறார்.

# இடைவேளைக்குப் பின் இழுவை!

சந்தேகக் கணவன். பொறுமைத்திலக மனைவி. கடைசியில் சந்தேகம் விலகி சுபம்.

அரைத்த மாவுதான் என்றாலும், இந்த முறை மிக்ஸியில் அரைத்திருக்கிறார் துரை.

எங்கேயோ சாம்பாரில் ஏதோ கலந்து சாப்பிட்டவர்கள் மயக்கம் என்றதால் சாம்பார் வேண்டாம். இட்லி மாவில் பல்லி என்று பேப்பர் நியூஸ் கேட்டு இட்லி வேண்டாம். சரியான சந்தேகப் பிசாசு இந்த ராஜேஷ். பெண் பார்க்கப் போன இடத்தில் 'பெண்ணுக்கு நாலுவிரல்தானே இருக்கு' என்று சந்தேகப்படுவது பிசாசின் உச்சம். ராஜேஷ் விளாசு விளாசு என்று விளாசுகிறார், நடிப்பை.

கைகொடுங்கள் சத்யராஜ். குலுக்கோ குலுக்கென்று குலுக்க வேண்டும். வசன உச்சரிப்பில்வித்தைகாட்டுவதென்ன, முகபாவங்களில் மூச்சைப் பிடித்து இமய உச்சிக்கே போயிருக்கும் ஜோர் என்ன — பட்டை திட்டப்பட்ட வைரம்தான்.

ஜெய்—சுமித்ரா நல்ல ஜோடி. ஆர்ப்பாட்டம், அலட்டல் இல்லாத நடிப்பு. ஆனால் இந்த பீடா விவகாரம்தான் ஊரை நாறடித்து விடும் போல் இருக்கிறது.

ஜனகராஜ் ஹாஸ்ய சமாச்சாரத்தில் அவ்வளவாக ஒன்றும் காரம், மணம், குணம் தெரியக் காணோம். வனிதா சும்மா ஒப்புக்குச் சப்பாணி.•

'காளி பத்ரகாளி'யும், 'தேவி என் தேவி'யும் நேயர் விருப்பத்தில் இனிமேல் அடிக்கடி இடம் பெறப் போகிற பாடல்கள். இசை, அட, நம்ப ஷங்கர் — கணேஷ்.

ரொம்ப நாட்களுக்கு அப்புறம் துரை மறுபடி தலை தூக்கியிருக்கிறார். ஜெய் — சுமித்ரா ஜோடி மூலம் வாழாவெட்டியை வாழவைப்பது, விதவா விவாகம் செய்து வைப்பது, லிஃப்ட் கொடுத்துத் தப்புக்காரியம் செய்யும் ரவுடியை உதைப்பது, சரிதா — ராஜேஷ் குடும்பத்தை இணைய வைப்பது என்று பல நீதிகளை சமூகத்திற்கு வாழைப்பழத்தில் ஏற்றிய ஊசியாய்ப்போதனை செய்திருப்பது பாராட்டப்பட வேண்டிய விஷயந்தான்.

இடைவேளை வரை ஆயாசமேயில்லாமல் நகர்ந்து, ராஜேஷிற்கு விபத்து என்ற திடுக்கோடு படம் நின்று தொடரும் விதமும் ஜோர்தான்.

ஆனால் அதற்கப்புறம் ராஜேஷ் படுக்கை, சரிதா வளைகாப்பு என்று சவ சவ நிகழ்ச்சிகள்.

பத்து வாரத்தில் முடிய வேண்டிய தொடரை வேண்டுமென்றே பதினேழு, பதினெட்டு வாரங்களுக்கு இழுக்கிறார் போல் இல்லை?

—ஜெயமன்மதன்.

## வேலி






**எல்.**கே. ஜியிலிருந்து எம். எஸ்ஸி வரை எந்த வகுப்பிற்கும் படிக்க வேண்டிய புத்தகங்கள் எக்கச்சக்கமாகிவிட்டது! அவற்றைப் பாதி படித்து முடிப்பதற்குள்ளாகவே பரீட்சை நெருங்கி விடுகிறது! இந்நேரத்தில் வேகமாகப் படிக்கச் சில எளிய வழிகளைத் தெரிந்து கொண்டால், நாம் எல்லாப் பாடங்களையும் படித்து முடிக்க உதவியாய் இருக்கும்.

வழிகள்:

சிலர் மனத்துக்குள் படிக்கும் போதும் உதட்டை அசைத்துக் கொண்டு ஒவ்வொரு வார்த்தையாகப் படிப்பர். இவ்வாறு நத்தை வேகத்தில் படித்தால் நேரம் நிறைய செலவழிந்து விடும்! இதனைத் தடுக்க, நாம் படிக்கும் போது உதட்டின் மீது விரலை அழுத்தி வைத்துக் கொண்டு படிக்க வேண்டும். (வாயில் விரலைச் சப்பிக் கொண்டல்ல!)

படிக்கும்போது வரிகளுடன் கண் நகரும்போது தலை அசையாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். அவ்வாறு அசைந்தால் இருகைகளாலும் தலையை அழுத்திப் பிடித்துக் கொள்ள வேண்டும்.

சிலர் வரிகளின் கீழே விரலை வைத்து மெதுவாக நகர்த்தியபடி படிப்பார்கள். இந்த வழக்கத்தை மாற்ற, பக்கத்தின் இரு ஓரங்களையும் இரு கைகளாலும் அழுத்திப் பிடித்துக் கொண்டு படிக்கவும்.

அமைதியான இடத்தில் அமர்ந்து, கவனம் சிதறாமல் படியுங்கள். குருட்டு யோசனை செய்யாதீர்கள்.

தெரியாத வார்த்தைகள் வந்தால், அவை வந்த இடத்தை வைத்து அர்த்தத்தை ஊகியுங்கள். பிறகு அகராதியில் ஒப்பிட்டுப் பார்த்துக் கொள்ளலாம்.

ஒவ்வொரு முழு வாக்கியத்தையும் ஒரே மூச்சில் படித்துவிட்டு அதன் அர்த்தத்தைப் புரிந்து கொள்ள முயலவும்.

ஒவ்வொரு பகுதியையும் வேகமாகப் படித்தபின் அதன் ஆசிரியர் என்ன சொல்கிறார் என்பதை மனத்தில் சுருக்கமாக அசை போட்டுப் பார்க்கவும். படித்த வரிகளையே மீண்டும் மீண்டும் படிக்காதீர்கள். ஒவ்வொரு வார்த்தையும் படித்தவுடன் அது மறைந்து விடுவதாக (அழிந்து விடுவதாக)ப் பாவனை செய்து கொண்டு படியுங்கள்.

இப்பயிற்சிகளை விடாது செய்தால் வெற்றி நிச்சயம்! நீங்கள் எடுத்துக் கொள்ளும் முயற்சிக்கேற்ப விளைவு உண்டாகும்!

(நன்றி: The Hindu)

என். கே. சந்திரசேகர்,
மூன்றாம் ஆண்டு கணிதம்,
விவேகானந்தா மாலைநேரக் கல்லூரி,
சென்னை — 4.

---




கொடுக்கும் தெய்வம்
கூரையைப் பிய்த்துக் கொண்டு
கொடுக்குமாம்;
தெய்வம்
எங்களுக்கு கொடுக்க வேண்டாம்
எங்கள் கூரையை
பிய்க்காமல் இருந்தாலே போதும்.

கொடுமுடி கணேசன்,
மூன்றாமாண்டு பொதுவியல்,
அறை எண் 11/II,
அரசு பொறியியல் கல்லூரி விடுதி,
சேலம்—636 011.




மண்டையில் அடித்தவுடன்
நெருப்பைக் கக்கிவிட்டு
கால் நிமிஷத்தில்
காலமாகிவிடும் பயங்கர வீரர்கள்
பதுங்கும் இடம்.




வரப்போகும் மழைக் கணவனை
வரவேற்க முகில் மனைவி
அமைக்கும் சீரியல் செட்.

— சி. செலுவகுஹேஷ்,
இளமறிவியல் இரண்டாமாண்டு
(இயற்பியல்),
பூ. சா. கோ. கலை அறிவியல்
கல்லூரி,
கோயமுத்தூர்—641 014.



கணவன்: எனக்கு கோதுமை தோசை பிடிக்காதுன்னு உனக்குத் தெரியாதா?

மனைவி: அதை 18 தோசை சாப்பிட்ட பிறகுதான் சொல்லணுமா?

—ஈ. பிரேம்ராஜ்குமார்,
பி.ஈ.முதலாண்டு (இயந்திரவியல்),
கொங்கு பொறியியற் கல்லூரி,
பெருந்துறை—638 052.
பெரியார் மாவட்டம்.



# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி -1985

பிரசுரத்துக்கு ஏற்கப்பட்ட கதைகள்:

1. அடைக்கலம் — ஜானகி மணாளன்
2. சபிக்கப்பட்டவர்கள் — கே. கே. ராஜன்
3. சகாராமனிதர்கள்—ஜானகிமகன்
4. குலதருமம் — ''ஸ்வாமி''
5. தெய்வம் தேடி வரும் — ஷைலஜா
6. அன்னவரே என் கணவர்—சுபஸ்ரீ
7. வசந்தத்தின் மறுபிறவி — பட்டுக்கோட்டை ராஜா
8. கொடுக்க முடியாத விலை— ''அன்னம்'
9. தண்டிக்கப்படும் நியாயங்கள் — சத்யாசீனிவாசன் (அறிமுகஎழுத்தாளர்)
10. ரோபோ முத்தம்மா — அஞ்ஞானி
11. ஜீவித தாகம் — ரூபாவதி
12. ஆகையால் குழந்தைகளே....!— ஹெச். என். ஹரிஹரன்
13. நிதர்சனங்களின் தரிசனங்கள் — சத்யாசீனிவாசன் (அறிமுகஎழுத்தாளர்)

# வட்டமேஜை




### தலையங்கம் அருமை

* உரிமை பேசும் எம். எல். ஏ க்கள் உணர வேண்டிய கடமைகளைத் தலையங்கத்தின் மூலம் அருமையாகச் சொல்லியிருக்கிறீர்கள்.

திருச்சி—20. ஆர். அப்துல் சலாம்.

* இந்த வாரம் மௌனப் புயல் என்னைக் கடந்த அக்டோபர் முப்பதுக்கு இழுத்துச் சென்று மனத்தைப் பிசைந்துவிட்டது.

குடியாத்தம். பட்டாபிராமன்.

* விளையாட்டு வீரர் நாராயணசாமியின் கண்ணீர் கதையைப் படித்தேன். இந்திய அரசு விளையாட்டுத் துறைக்கு உண்மையில் மதிப்பளிப்பதாக இருந்தால் குருராஜ், ராகவன் என்ற இரண்டு பேர் மேலும் நடவடிக்கை எடுக்க வேண்டும்.

புதுக்கோட்டை. மலர்மங்கை.

### படித்தவர்கள் மட்டும் என்ன வாழ்ந்தார்கள்?

* 'படிக்காததாலும், ஏழையாய் இருப்பதாலும் விளையாட்டு வீரர் நாராயணசாமிக்கு நேர்ந்த கதியைப் பற்றிப் படித்தேன்.' படித்துப் பட்டம் வாங்கியவர் நிலைமட்டும் என்ன வாழ்கிறது? ஜாதி காரணமாகவோ, பொருளின்மை காரணமாகவோ புறக்கணிக்கப்பட்ட படித்தவர்கள் ஏராளம்.

கோவை. என். பாலகிருஷ்ணன்.

* லதா கைவண்ணத்தில் அட்டைப் படம் மாறுதலாக இருந்தது. சித்தரஞ்சனி தொடரைப் பைண்ட் செய்யும்போது அதையும் சேர்த்துக் கொள்ள வேண்டியதுதான்.

சென்னை—28. எம். தியாகராஜன்.

### செவிடன் காதில் ஊதிய சங்கு

* அரசே ஆலயங்களை விட்டு வெளியேறு!' என்ற கோஷம் ஆளும் கட்சியினர் காதில் விழுந்தாலும் அது செவிடன் காதில் ஊதிய சங்காகத்தான் இருக்கும். ஏனென்றால் கோயில் நிர்வாகம் என்பது இன்றைய ஆளும் கட்சியினருக்குப் பணம் பழம் தரும் மரம்!

நெல்லிக்குப்பம். ரா. ஜோதிராமன்.

* நடுப் பக்கங்களில் உமாபதியின் கைகளும் சிந்தனையும் சேர்ந்து தடபுடல் செய்துவிட்டன. தெலுங்கு—கங்கை திட்டம் பற்றிய கருத்துப் படம் அபாரம்.

திருவத்திபுரம். காவேரி சேகர்.

### வைர வரிகள்

* வைரமுத்துவின் வாரம் ஒரு கடிதம் சிநேகத்துடன் எங்களிடம் பேசியது. இன்றைய இளைஞர்களுக்கு ஆரோக்கியமான டானிக்.

சேலம்—1. வே. சுகவனம்.

* இன்றைய இளந்தலைமுறையினர் அறிந்திராத பல அரசியல் ஞான விஷயங்களைத் தாங்கி வந்தது ராஜாஜி வாழ்க்கை வரலாறு. தமிழாக்கம் செய்த சீதா ரவி அவர்களுக்கும் பிரசுரம் செய்த உங்களுக்கும் கல்கி வாசகர்கள் சார்பில் பாராட்டுக்கள்.

மோகனூர். வி. பாலகிருஷ்ணன்.

### அரசு தூங்குகிறது

* பெரியார் மாவட்டத்திற்குத் தியானேஸ்வரன் அவர்கள் ஆட்சித் தலைவராக இருந்த போது வ.உ.சி. பூங்காவில் ஸ்டேடியம் கட்ட 24 பஞ்சாயத்து யூனியன்களிடமும் தலா ஒரு லட்சம் ரூபாய் வீதம் சேகரித்தார். பூங்காவிற்குள் இடத்தைத் தேர்ந்தெடுத்து அரசாங்க அனுமதிக்கு விண்ணப்பித்தார். இன்று வரை (பல ஆட்சித் தலைவர்கள் மாறிவிட்டனர்) அரசு அனுமதி வழங்காமல் தூங்கிக் கொண்டிருக்கிறது.

ஈரோடு. செம்மறியின்.

* ''அரசே ஆலயங்களை விட்டு வெளியேறு'' என்னும் கட்டுரையில் ''பெருமை மிக்க கும்பகோணத்தில் உள்ள புகழ் வாய்ந்த அருள்மிகு ஆதிகும்பேஸ்வரர் கோவிலில் டெலிபோன் பில் பல்லாயிரக்கணக்கில் வந்து இருக்கிறது என்பது பற்றிய குற்றச்சாட்டினை வெளியிட்டுள்ளீர்கள். இக்கருத்து முற்றிலும் ஆதாரமற்ற செய்தியாகும். மாதம் 1க்கு ரூ 150/— மட்டும் தான் இத்தலைப்பில் செலவு செய்யப்பட்டு வருகின்றது.

கும்பகோணம். எஸ். மகாலிங்கம்.
செயல் அலுவலர்.

* தென்காசி தாலுகா, கடையநல்லூர் பஞ்சாயத்து யூனியனிலிருக்கும் திரிபுரசுந்தரபுரத்தில் சமீபத்தில் அமைச்சர் நல்லுசாமி தரைமட்டக் குடிநீர்த் தேக்கத் தொட்டி ஒன்றைத் திறந்து வைத்தார். இதில் வேடிக்கை என்னவென்றால், ஏதோ கோளாறினால் நீரை மேலேற்றும் மோட்டாரினால் தண்ணீரை மேலே ஏற்ற முடியாதிருக்கவே திறப்பு விழாவுக்கு முன்பே சில ஆட்களைக் கொண்டு குடங்களின் மூலம் தண்ணீரை எடுத்துத் தொட்டியில் ஊற்றி ஒரு 'செட் அப்' செய்து வைத்தார்கள். அமைச்சரும் வந்து 'ஜம்' என்று திறப்பு விழா நடத்திச் சென்றுவிட்டார்! இன்று குழாயைத் திறந்தால் காற்றுக் கூட வருவதில்லை.

பொய்கை. பெ. சங்கரபாண்டியன்.

(கடைசிக் கடிதம் பரிசு பெறுகிறது)

## செட் அப் செய்த இறப்பு விழா!

# வாசகர் கருத்து




நாற்பத்தோரு வாரங்களும் ஆவலுடன் படித்தேன் மோகினி திருக்கோலத்தை. என்றும் மறக்க முடியாத எண்ணக் கோலமாய் அமைந்துவிட்டது.

— கவி கண்ணன், போடிநாயக்கனூர்.

வர்மனும், சிந்துவும், வேன்லாலும் மனத்தில் சுற்றிச் சுற்றி வருகிறார்கள். மோகினி திருக்கோலத்துக்கு ஓவியர் விஜு வரைந்த படங்கள் அருமை.

— எம். ரமேஷ்குமார், போடி.

மோகினி திருக்கோலத்தில் செங்கமலவின் மறைவு ஒரு கரும்புள்ளியாகப் போய்விட்டதே!

— வெ. கோபால், மாதேமங்கலம்.

இளைய காலத்து பிரெஞ்சுக்காரர்களையும், ஆங்கிலேயர்களையும், மராட்டியர்களையும் பற்றிய சரித்திர அறிவோடும், உணர்வோடும் படைக்கப்பட்டது மோகினி திருக்கோலம். ஏழுமலையானின் செல்வங்கள் அந்த நாளில் என்ன பாடுபட்டிருக்கின்றன!

— சி. தேவேந்திரன், சிங்காரப்பேட்டை.

ஸ்ரீ வேணுகோபாலன்—விஜு ஆகியோரின் இணைந்த முயற்சியில் வெளி வந்த மோகினி திருக்கோலம் வாசகர்களுக்குக் கிடைத்த கோஹினூர் வைரம்.

— ஆர். வேலுமணி, கடலூர்—2.

ஆங்கிலேய ஆட்சியின் ஸ்தாபகத்துக்கு உதவி செய்த வர்மனை என்னால் கதாநாயகனாக ஏற்றுக் கொள்ள முடியவில்லை.

— இரணியல் கலை, சென்னை—57.

வர்மனை வழி அனுப்ப ஊர் எல்லைவரை வந்த ராபர்ட் கிளைவ் அச் செய்கையால் நம் மதிப்பில் உயர்ந்துவிடுகிறார்.

— லட்சுமிப்ரியா, பெங்களூர்—53.

வித்தியாசமான சரித்திர நாவல். பயணத்தையும், பணத்தையும் மையமாகக் கொண்டு அழகாக எழுதியுள்ளார் கதாசிரியர்.

— ஆர். ரவிவாதன், விழுப்புரம்.

**பின் அட்டை வண்ணப்படம்:**

திலீப் பானர்ஜி

பி. வி. ஆரின் ஆகாச கங்கை தொடர் ஆரம்பித்ததும் தெரியவில்லை, முடிந்ததும் தெரியவில்லை. அவ்வளவு விறுவிறுப்பு!

— சிவாஜிபாபு, அயன்புரம்.

'அரவிந்தன், பாவம்! வசுமதியை விட்டுவிட்டு மாயாவைக் கல்யாணம் செய்து கொண்டாரே' என்று வருத்தப்பட்டோம். கடைசியில்தான் புரிந்தது பி. வி. ஆர். சரியான ஜோடியைத்தான் இணை சேர்த்திருக்கிறார் என்று.

— ஆர். இராஜாமணி, மேலணிக்குழி.

அருமையான தொடரான ஆகாச கங்கைக்கு ஜெயராஜின் படங்கள் மேலும் அணி செய்தன.

— அருண், ஈரோடு—3.

ஆரம்பம் முதலே பி. வி. ஆரின் ஆகாச கங்கை சோபித்த போதிலும் முடிவுதான் மிகச் சிறப்பாய் அமைந்திருந்தது.

— ரங்கநாதன், துடுப்பதி.

மாயாவைக் குணமாக்கி, வசுமதியை அரைப் பைத்தியமாக்கி விட்டாரே கதாசிரியர்! இது நியாயமே இல்லை.

— அ. அ. முகமது நிசாம், புதுவை.

மாயாவையும் அந்துவையும் ஒன்று சேர்த்துவிட்டு வசுவை 'அம்போ' என்று விட்டுவிட்ட கதாசிரியர் இ. பி. கோ. 30ஆம் பிரிவின்படி வாசகர் மனச் சிறையுள் ஆயுள் தண்டனை பெற வேண்டும்.

— வி. சந்திரசேகரன், மதுரை—1.

ஒரு சராசரி கதையான ஆகாச கங்கை பி. வி. ஆரின் வித்தியாசமான நடை மூலம் சிறப்புப் பெற்றுவிட்டது. கதையின் உயிரோட்டத்திற்கு 'ஜெ'யின் ஓவியங்கள் மேலும் துணை புரிந்தன.

— ஏ. கே. நாசர், லெட்சுமாங்குடி.



உ

ஸ்ரீ கணேசாய நம:

அருள்மிகு ஸ்ரீ சித்தி புத்தி அம்பா சமேத கல்பக விநாயகர் திருக்கோவில்

சரோஜினி நகர், புது தில்லி—110 023.

24 ஆண்டுகளுக்குப் பின்னர், ஸ்ரீ காஞ்சி பரமாசாரியாருடைய ஆசியுடனும், மற்றும் ஸ்ரீ சிருங்கேரி மகா சன்னிதானத்தின் ஆசியுடனும் மேற்கொண்டுள்ள ஸ்ரீ சித்தி புத்தி அம்பா சமேத கல்பக விநாயகர் ஆலயத்தில் திரிதள விமானமும், மூன்று திசையிலும் கோபுரங்கள் அமைக்க, ரூபாய் நான்கு லக்ஷம் மதிப்பீட்டில் திருப்பணி நடந்து வருகிறது. மற்றும் ஆகஸ்ட் மாதம் 19ம் தேதி கும்பாபிஷேகம் நடக்கவிருக்கிறது. மேற்படி திருப்பணியில் கலந்து கொள்ள விரும்பும் பக்த சிரோமணிகள் தங்கள் நன்கொடையை ட்ராப்டாகவோ, காசோலையாகவோ கீழ்கண்ட முகவரிக்கு அனுப்பவும். திருப்பணி நன்கொடை வழங்குபவர்கள் திரு சித்தி புத்தி அம்பா சமேத கல்பக விநாயகரின் அருள் பெற்று உய்ய வேண்டுகிறோம்.

தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி:

மேனேஜிங் டிரஸ்டி,
ஸ்ரீ விநாயகமந்திர் கமிட்டி,
A-B, Block, Sarojini Nagar,
New Delhi 110 023 - Ph. No. 670924




உங்களுடைய படம் இங்கு இடம் பெற வேண்டுமா? ஏ.வி.எம்.மின் உயர்ந்த உள்ளம் படத்தில் நீங்கள் பார்த்து, ரசித்து, உங்கள் உள்ளத்தைத் தொட்ட சிறந்த காட்சியைப் பத்து வரிகளுக்கு மேற்படாமல் எழுதி அனுப்புங்கள்.

அத்துடன் உங்கள் பாஸ்போர்ட் சைஸ் போட்டோவையும் இணைத்து, ''உயர்ந்த உள்ளம்'', ''எனக்குப் பிடித்த காட்சி'', ஏ.வி.எம். புரொடக்ஷன்ஸ், தபால் பெட்டி எண்: 2270, சென்னை—26, என்ற விலாசத்திற்கு அனுப்பவும்.

தேர்ந்தெடுக்கப்படும் கடிதங்கள் வெவ்வேறு பத்திரிகைகளில் உங்களுடைய புகைப்படத்துடன் பிரசுரிக்கப்படும். பரிசும் பெறுவீர்கள். போட்டோ அனுப்பாதவர்களின் கடிதங்களும் தேர்ந்தெடுக்கப்பட்டால் பிரசுரிக்கப்படும்.

ஒவ்வொரு சிறந்த கடிதத்திற்கும் தனித்தனிப் பரிசுகள் அனுப்பி வைக்கப்படும்.

பங்கு பெறும் பெண்கள் அனைவருக்கும் ஆறுதல் பரிசு உண்டு.

ஆகஸ்ட் 30 ஆம் தேதிக்குள் வரும் கடிதங்கள் மட்டுமே இந்த திட்டத்தில் சேர்த்துக் கொள்ளப்படும்.



''முதல் உதவிப் பெட்டி பரிசு தரீங்களே! எதுக்கு மாமா?''

''என் பொண்ணுக்குக் கொஞ்சம் முன் கோபம் ஜாஸ்தி!''



''விட்டு வேலைகள் எனக்கு என்னென்ன தெரியும் என்பதை விடியோ படம் எடுத்து வச்சிருக்கேன்! உங்க பொண்ணுக்குப் போட்டுக் காண்பிக்கட்டுமா, மாமா!''



''நம்ப பாப்பா பற்றி விமர்சனம் வந்திருக்கு.''

''என்ன! படி.''

''நடிப்பில் பாப்பா; உடலில் பீப்பா....!''

''இவன் என் பால்ய நண்பன்! சாப்பிட ஏதாவது கொண்டா!''

''பலப்பம் கடிக்கிறீர்களா? ரப்பர் துண்டு சாப்பிடுறீங்களா.....?''



''தியேட்டர் மானேஜர் ஃபோன் பண்ணுகிறார். ஐநூறு வௌவால் வேணும்னு!''

''எதுக்கு?''

''அவருடைய தியேட்டரில் குட்டிச் சாத்தான் 500'வது நாளா ஓடுகிறதாம்! தியேட்டரில் அலங்காரமா கட்டித் தொங்க விட!''



# ஓஹோ...ஹோ... ஹோ....



* திருட்டுப் போன......



* ......அத்தியாயங்கள்!



* 24 மணி நேரம்



* ஞானபீடம்

* பி. ராஜசேகரன், மதுரை.

? தமிழக அரசு புதிதாக ஜப்பானிடமிருந்து கப்பல் வாங்குகிறதே, லாபம் தருமா?

! யாருக்கு?

* சுப்பிரமணியன், பம்பாய்.

? சாலையோர வியாபாரிகளை அப்புறப் படுத்திவிட்டால் மட்டும் நகரம் தூய்மையாகி விடுமா?

! நடைபாதைக் கொடிக்கம்பங்கள், சிலைகள் முதலிய பல இடையூறுகளையும் அகற்ற மாநகராட்சி அறிவிப்புக் கொடுத்து செயலில் இறங்கியுள்ளதை வரவேற்கலாம். ஆனால் மக்களின் ஒத்துழைப்பின்றி நகர்ப்புறத் தூய்மையைக் காப்பதென்பது கடினம்தான். அடிப்படைக் கோளாறு அனைவருக்கும் கல்வி என்ற அரசியல் சாசன உறுதி மொழி நிறைவேற்றப்படாததும், பாட திட்டத்தில் உள்ள குறைபாடுகளும்.

* ஜி. குமரேசன், பாண்டமங்கலம்.*

? தொழில் துறையில் ஜப்பானைப் போல் இந்தியா எப்போது முன்னேறும்?

! ஜப்பான்காரர்கள் இங்கே கப்பல் வாங்க வரும்போது! இதைச் சாதிக்க இங்கே ஒரு இந்திய எர்ஹார்ட் தோன்ற வேண்டும். இரண்டாம் உலகப் போரின் முடிவில் அடியோடு அழிந்து போன ஜெர்மனியைப் பொருளாதார ரீதியில் வல்லரசாக்கிய அற்புதத்தைச் சாதித்தவர் எர்ஹார்ட்தான். நேச நாடுகளைக் கலந்தாலோசிக்காமல் அவர் எல்லா வித பொருளாதாரக் கட்டுப்பாடுகளையும் நீக்கினார். அடுத்த நாளே பதுக்கல் பொருள்கள் எல்லாம் கடை பரப்பப்பட்டன. பின்னர் ஜெர்மானியர்களை கடுமையாக உழைக்குமாறும் தேசத்தைப் புனருத்தாரணம் செய்யுமாறும் ஊக்குவித்துக் கொண்டே இருந்தார். 'தனியார் துறைத் தொழில்கள், மார்க்கெட் பொருளாதாரம், சுதந்திர வர்த்தகம்' என்பதே அவர் தாரக மந்திரமாக இருந்தது. 1948ன் இரண்டாவது ஆறு மாத காலத்தில் மட்டும் தொழில் உற்பத்தி 50 சதம் உயர்ந்தது!

* ஏ. எம். பழனிச்சாமி, கோவை.

? நம் நாட்டு நாணயத்தைக் கூட வேற்று நாட்டவரை விட்டுத் தயாரிக்கச் சொல்வது நியாயமா?

! அதுவாவது பரவாயில்லை. நம் நாட்டில் ''நாணயம்'' இறக்குமதி செய்தால்தான் உண்டு என்ற அளவுக்கு அரிதாகிவிட்டதே அதுதான் வேதனை.

* ஜி. நீலா, மன்னார்குடி.

? அமிதாப்பும் லோக் சபையில் ஏதோ பேசிவிட்டார் போலிருக்கிறதே?

! ஆமாம், ஏதோ பஸ் விட வேண்டும் என்று கூறப்போக, 'அது மாநில விவகாரம். லோக் சபையில் பேசப்பட வேண்டியதல்ல' என்று நினைவூட்டத் தேவைப்பட்டிருக்கிறது. 'தபால் கார்டின் விலையைக் குறைப்பேன்' என்று கூறிய நம்மவருக்கு அண்ணன்தான் போங்கள்! இதைப் பார்க்க, உதகை ரயில் பற்றிப் பேசிய தென் சென்னை எம். பி. எவ்வளவோ தேவலாம்.

* என். செந்தில்குமார், மயிலாடுதுறை.

? சமீபத்தில் தங்கள் பாராட்டுக்குள்ளானவர் யார்?

! ஞான பீடத்தை இவ்வாண்டு அலங்கரிக்கும் தகழி.

* என். பாலு, திருச்சி.

? அரசு பிழைகளே இல்லாத வாக்காளர் பட்டியலைத் தயாரித்து அச்சடிப்பதற்குள் உள்ளாட்சி தேர்தல்களுக்கு நாம்தான் ரொம்ப அவசரப்படுகிறோம், இல்லையா?

! பஞ்சாயத்து தேர்தல்களை ஒத்திப் போட்டுக் கொண்டே போவதைவிட வெட்கக் கேடான விஷயம் ஒன்று உண்டென்றால் அது அப்படி ஒத்திப் போடுவதற்காகக் கூறப்படும் காரணங்களே.

* ராதா, சென்னை.

? கோட்டு வாத்தியம் ரவிகிரணின் 24 மணி நேர வாசிப்பு பற்றி....?

! எனக்கென்னவோ இது போன்ற கின்னஸ் பாணி சாதனைகளில் நம்பிக்கை இல்லை. என்னைக் கேட்டால், '24 மணி நேரம் நினைவில் இருக்கிற மாதிரி இரண்டு மணி நேரம் வாசித்தால் போதும்' என்பேன். ஆனால்

## அமிதாப் மக்களவையில்—

தமது சபதத்தை நிறைவேற்ற ரவிகிரன் அடையாறு பத்மநாப ஸ்வாமி கோயிலில் 24 மணி நேரம் வாசிப்பதை யாரும் ஆட்சேபிக்க முடியாது. என்ன சபதம்? ''ஏண்டா! சதா கிரிக்கெட் பாட்டை எடுத்துண்டு ஓடறியே?'' என்று அப்பா கேட்டபோது, ''அங்கும் சும்மா நிற்க மாட்டேன்; காயத்ரி சொல்லிண்டிருப்பேன்'' என்றுன் சிறுவன் ரவிகிரன். ''ஆறு மணி நேரம் மாட்ச் ஆடறியே? நாலு மணி நேரம் உட்கார்ந்து வாசிப்பியா?'' என்று கேட்டபோது, ''நாலு என்ன, இருபத்தி நாலு மணி நேரம் வாசிப்பேன்'' என்றுன். அந்தச் சவால் இப்போது நிறைவேறுகிறது! ஆதரவற்றுள்ள கோட்டு வாத்தியம் பக்கம்கவனம்சர்ப்பு முயற்சியாகவும் அமைந்துள்ளது.

* மஞ்சுதேவன், சென்னை.

? சமீபத்தில் தங்களை அதிர்ச்சியில் ஆழ்த்திய விஷயம்?



• தொடரும் துன்பம்



• ஜெர்மன் அற்புதம்

! போபால் துயரம் இன்றும் தொடர்கிறது என்று படித்தபோது அதிர்ச்சியாகத்தான் இருந்தது. பாதிக்கப்பட்டவர்களுக்கு பொருளாதார உதவி கிட்டவில்லை என்பது ஒரு பக்கம். எட்டு மாதங்களுக்கு முன் டிசம்பர் மூன்றும் தேதி நடந்த விபத்து காரணமாக இன்றைக்கும் மக்கள் மடிந்து கொண்டிருக்கிறுர்கள் என்பது தாங்கிக் கொள்ள முடியாத துயரமாய் இருக்கிறது. இன்றைக்கும் சுமார் 20,000 முதல் 40,000 மக்கள் வரை போபாலில் மூச்சிரைக்க அவதிப்படுகிறுர்கள். அல்லது ஊக்கமிழந்து காணப்படுகிறுர்கள். கண்கள் வரண்டு போகவும் தசைநார்களில் சக்தி குன்றி விடவும் கஷ்டப்படுகிறுர்கள். இதற்கெல்லாம் மருந்தே கிடையாது! துயரத்தையும் மீறி இதற்கெல்லாம் காரணமானவர்கள் மீது ஒரு மௌனக் கோபம் உள்ளத்தில் குமுறுகிறது.

* ஜி. சிவக்குமார், பழநி.

? காதல் திருமணம் செய்து கொண்ட பெற்றேர்களும் கூடத் தம் பிள்ளைகளின் காதலை எதிர்க்கிறுர்களே?

! அனுபவம் பேசுகிறது!

* பா. கிருஷ்ணதாஸ், கும்பகோணம்.

? அரசியல்வாதிகளுக்கு மனச்சாட்சி இருக்கிறதா?

! அவர்கள் எதற்குமே சாட்சி வைத்துக் கொள்ள மாட்டார்கள்.

* தசரதராமன், தஞ்சாவூர்.

? இருட்டுக் கொடுத்த அனுபவம் உண்டா?

! நண்பர் ஒருவரின் திருமண வரவேற்பு — நாலு நட்சத்திர ஓட்டலில். காரியாலயத்திலிருந்து நேரே சென்றதால் பிரீஃப் கேஸுடன் போயிருந்தேன். அதில் நிறைய பணம் இருக்கும் என்று எவனே அசடு எண்ணிக் கிளப்பிக் கொண்டு போய்விட்டான். ஒருவேளை என்னை அரசியல்வாதி என்று எண்ணிக் கொண்டானே? எனக்கா ஒரே கவலை. அதில் பி. வி. ஆர்., ஸ்ரீவேணு கோபாலன் தொடர்கதைகளின் ஒரே கையெழுத்துப் பிரதிகள், புரூப் எல்லாம் இருந்தன. இரவு வீட்டில் படிக்க எடுத்துச் சென்று கொண்டிருந்தேன். அந்த எழுத்தாளர்களை எப்படி சந்திப்பது, என்ன சமாதானம் சொல்வது? இரவு பதினேரு மணிக்கு மேல் ரயில்வே போலீஸ் எஸ். ஐ. உதய சூரியகுமார் ஃபோன் செய்தார்: ''உங்கள் பெட்டி ஸெண்ட்ரல் ஸ்டேஷனில் புக்கிங் கவுண்டர் அருகே கிடைத்து எடுத்து வைத்திருக்கிறேன்!'' ஓட்டமாக ஓடினேன். பெட்டியில் எல்லாம் இருக்கிறது என்று சரி பார்த்துக் கொண்டேன். ஏமாற்றமளித்த கோபத்தில் அந்தத் திருடன் கூவத்தில் எறிந்து விட்டுப் போயிருக்கலாம். ஆனால் பொறுப்புணர்வுடன் போலீஸாரிடம் பெட்டி கிடைக்கச் செய்திருக்கிறானே! வாழ்க! இன்னொரு திருப்தி: பெட்டியில் இருந்த கல்கி, கோகுலம், மங்கையர் மலர் இதழ்களை மட்டும் காணேம்!

---

*ரூ 10 பரிசு பெறுபவர்:

ஜி. குமரேசன்,
S/o. ஒ. எஸ். கணேசன்,
தேர்வீதி,
பாண்டமங்கலம் அஞ்சல்,
சேலம் (மா.வ.). 637 208.



நீங்கள் கேட்டவை • தராசு

# –பேசிவிட்டார் போலிருக்கே?–

# கபாலி கோயிலில் ஜெயில் சிங்

நாலு மணிக்கெல்லாம் பட்டு வேஷ்டி, பட்டுச் சட்டையில் அமைச்சர் ஆர்.எம்.வீ. அ.தி.மு.க. கரை வேஷ்டியில் அமைச்சர் வி. வி. சுவாமிநாதன், கோட்டு சூட்டில் அறநிலையத் துறை கமிஷனர் ஆளுடைய பிள்ளை, மற்றும் மயிலை எம்.எல்.ஏ. வளர்மதி (அ.தி.மு.க.) எல்லாரும் ரெடி. ஜனாதிபதியின் மூன்று நாள் விஜயத்தின்போது, கூடவே இருந்து கவனித்துக் கொள்ள வேண்டுமென்று அமைச்சர் சுவாமி நாதனுக்கு உத்தரவாம். அதை அவர் சிறப்பாய்ச் செய்து வருவதை மறக்காமல் எழுதும்படி கேட்டுக் கொண்டார் அமைச்சரின் பி.ஏ.!

சரியாய் 4.32. ஜனாதிபதி வந்தார். வழக்கம் போலவே வெள்ளைக் கோட்டு, புத்தம் புது ரோஜாப்பூ. தங்க மூடி போட்ட இரட்டைப் பேனா கோட்டுப் பாக்கெட்டில்.

கோவில் கோபுரத்தை அண்ணாந்து பார்த்து வியந்து போனார் ஜனாதிபதி. மிகவும் மெதுவாய் நடந்தார். கோவில் வரலாற்றைக் கூறியபடியே ஆர்.எம்.வீ.யும் மற்றவர்களும் வந்தார்கள்.

அடுத்தது சிங்கார வேலர் சன்னதி. ஜனாதிபதிக்கும் பேரன்களுக்கும் மாலையிட்டு மரியாதை. குழந்தைகள் முகத்தில் ஏக சந்தோஷம். உண்டியலில் நோட்டுகள்.

அடுத்தது கபாலீஸ்வரர் தரிசனம். விசேஷ பூஜை. பிரசாதம் பெற்றுக் கொண்டு மறுபடி காணிக்கை.

கற்பகாம்பாள் தரிசனம் முடிந்ததும் மகா மண்டபத்தில் அமரவைத்தனர் ஜனாதிபதியை. இரு பக்கங்களிலும் பேரன்கள். பின்னால் மகள். இன்னொரு பக்கம் கவர்னர்.

ஆர்.எம்.வீ. ஜரிகை பளபளக்கிற சிவப்பு



வெள்ளைத் தலைப்பாகை. ஜனாதிபதியுடன் அவரது மகன் டாக்டர் மஞ்சித் கௌரும், கவர்னர் குரானாவும் வந்திருந்தனர். கூடவே இரண்டு வாண்டுகள். படு சுட்டிகள். அவர்கள் ஜனாதிபதியின் பேரக் குழந்தைகள். பெயர்கள்: சூர்ய ப்ரீத், ஹர் ப்ரீத்.

பூர்ண கும்ப மரியாதைக்குப் பின் விநாயகர் சன்னதி. கோட்டுப் பாக்கெட்டினுள் கை விட்டு, நூறு ரூபாய் நோட்டா, நோட்டுக்களா என்று சரியாய்த் தெரியவில்லை — எடுத்து, உண்டியலில் போட, அது உள்ளே போகாமல் சண்டித்தனம் செய்ய, கவர்னர் குரானா உள்ளே தள்ளிவிட்டார்.

தீபாராதனை முடிந்ததும் விபூதி இட்டுக் கொண்டார் ஜனாதிபதி. மஞ்சித் கௌர் தாமும் இட்டுக் கொண்டு, தம் குழந்தைகளுக்கும் இட்டு விட்டார்.

பொன்னாடை ஜனாதிபதிக்கும், கவர்னருக்கும் போர்த்தி சட்டமிட்ட சுவாமி படங்களை அளித்தார். மஞ்சித் கௌருக்கு பச்சை நிற பட்டுப் புடவை.

கோவிலைச் சுற்றி வரும்போது, "இந்த ஊரில்தான் திருக்குறள் எழுதின வள்ளுவர் பிறந்தார்" என்று வீரப்பன் சொல்ல, "ஓ! இஸ் இட்!" என்று வியந்தார் ஜெயில் சிங்.

*தொகுறு: ஜெயில்சிங் அந்தமான் போயிருந்தபோது அங்கே கபாலி கோவில் பற்றிச் சில தமிழர்கள் சொன்னார்களாம். இது கோவில் நிர்வாகத்தினருக்குத் தெரிந்ததும் இவர்கள், "இந்த முறை சென்னை வரும் போது கோவிலுக்கு வர வேண்டும்" என்று கடிதம் எழுத, ஜனாதிபதி ஒப்புக் கொண்டாராம்.

— ஜூவி.

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600032· (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani

Editor: K. Rajendran

பற்களின் மீதான
தம்முடைய பிடிமானம்
தளர்ச்சி அடைய
உங்கள் ஈறுகளுக்கு
இடமளிக்காதீர் !

ஈறுகளை பலப்படுத்துவதற்கான விசேட
அஸ்ட்ரிஞ்ஜெண்ட் அடங்கியிருப்பது ஃபோர்ஹென்ஸ் ஒன்றில்தான்.
உங்கள் ஈறுகள் உறுதியோடிருக்கும் போது உங்கள்
பற்கள் நீடித்த ஆயுளைப் பெறுகின்றன.

சிறந்த அமெரிக்கப் பல் டாக்டர் ஆர். ஜே.
ஃபோர்ஹென், தன்னுடைய டூத் பேஸ்ட்டில் விசேட
அஸ்ட்ரிஞ்ஜெண்ட் ஒன்றைச் சேர்த்தார்! அது.
ஈறுகளில் நேரடியாக செயல்பட்டு உண்மையிலேயே
அவற்றை பலப்படுத்துகிறது. அது, ஈறுகளைப்
உறுதிப்படுத்துவதால் பற்கள் சிறந்த
பிடிமானத்தைப் பெறுகின்றன. ஆகவே பற்களுக்கு
உறுதியான அடித்தளமும் நீடித்த ஆயுளும்
கிடைக்கின்றன.




**ஃபோர்ஹென்ஸ் – பல் டாக்டரால் உருவாக்கப்பட்ட டூத்பேஸ்ட்**

339F 203 TAM

